# ஸ்ரீராமகிருஷ்ணவிஜயம்

ஆனி

ஜூன் - 1979



விலை ரூ-1

ஸ்ரீராமகிருஷ்ண மடம்,
மயிலாப்பூர் சென்னை-600 004.

## ஆந்திர பிரதேசத்தில் புயல் நிவாரணம்

பேரன்புடையீர்,

1979 மே மாதம் 11, 12, தேதிகளில் ஆந்திர மாநிலத்தில் வீசிய புயல் காரணமாகப் பெருமளவில் உயிர் சேதமும், பொருட்சேதமும் ஏற்பட்டிருப்பது அன்பர்கள் அறிந்ததே. லட்சக்கணக்கான மக்கள் வீடுவாசல்களை இழந்து அல்லல்படுகிறார்கள். அவர்களுக்கு உடனடியாக உணவு, உடை, உறைவிடம் ஆகியனவற்றைத் தரும் பொறுப்பு நம்மை எதிர்நோக்கியுள்ளது.

வெள்ளத்தினாலும் புயலினாலும் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணம் அளிக்க நன்கொடைகள், துணிகள், கட்டடச் சாமான்கள் ஆகியவற்றைத் தந்துதவும்படி பொதுமக்களைக் கேட்டுக் கொள்கிறோம். இதற்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு உரிய ரசீது தரப்படும். செக் அல்லது டிராப்ட், 'ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன், சென்னை' என்னும் பெயருக்கு எழுதி 'தலைவர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004' என்ற முகவரிக்கு அனுப்பக் கோருகிறோம். ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனுக்கு அளிக்கப்படும் எல்லா நன்கொடைகளுக்கும் வருமான வரி விலக்குச் சலுகை உண்டு.

புயல் தாக்கிய செய்தியை அறிந்தவுடனே சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த சுவாமிகள் நெல்லூருக்கு விரைந்து புயலின் சேதங்களைக் குறித்த விவரங்களைச் சேகரித்து நிவாரணப் பணிகளை உடனடியாக ஆரம்பித்து நடத்தி வருகின்றனர். ஆந்திரப் பிரதேச அரசாங்க அதிகாரிகளுடன் கலந்து ஆலோசித்த பின்பு நெல்லூர் பகுதியில் 50 கிராமங்களில் நிவாரண வேலைகளை ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் ஆரம்பித்து நடத்தி வருகிறது. உண்மையிலேயே மிகவும் பாதிக்கப்பட்ட இடங்களில் நிவாரண முகாம்கள் துவக்கப்பட்டு சுமார் 1500 குடும்பங்களுக்கு உணவு, உடை, ஆகியனவற்றை மிஷன் வழங்கியுள்ளது.

சுவாமி தபஸ்யானந்தர்
தலைவர்.
**ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் நிவாரணப் பணி**
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்,
மயிலாப்பூர், சென்னை-600 004.

---

## டெபாசிட் முறை

ஆண்டுதோறும் ரூ. 10 சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் 125 டெபாசிட் செய்துவிட்டால், தொடர்ந்து மாதந்தோறும் ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் பத்திரிகை வந்துகொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று (குறைந்தது ஐந்து வருடங்களுக்குப் பிறகு) கருதும்போது தாங்கள் டெபாசிட் செய்த முழுத் தொகையாகிய ரூபாய் நூற்றிருபத்தைந்தையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம்.

நிர்வாகி
**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

---

## இந்த இதழின் அட்டைப்பட விளக்கம்

மனிதமனம் எப்போதும் அலைபாயும் இயல்பு கொண்டது. அவ்விதம் அலைபாயும் மனதை அட்டைப்படத்தில் உள்ள கடல் அலைகள் உணர்த்துகின்றன. சஞ்சலம், விருப்பு, வெறுப்பு, கவலை, துன்பம், சங்கல்பங்கள், விகல்பங்கள் மயமாக இருந்துகொண்டு அலைபாயும் மனதை நல்வழிப்படுத்த சான்றோர் பக்தி மார்க்கத்தை மனிதகுலத்திற்கு வழங்கியுள்ளனர். அட்டைப் படத்தில் காணப்படும் தாமரை, பக்தி மார்க்கத்தை குறிக்கிறது. அலைபாயும் மனம் அவ்விதம் பக்தியால் வெற்றி கொள்ளப்படும் போது, ஆத்ம ஞானமாகிய சூரியன் இதயத்தில் பிரகாசிக்கிறது.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்



தொகுதி—59 | ஜூன் 1979 | இதழ்—6

## பொருளடக்கம்



# ஸ்ரீ ராமகிருஷ்ணமடம்—சங்கம் ஆகியவற்றின் இரண்டாவது மாநாடு

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்—சங்கம் ஆகியவற்றின் முதல் மாநாடு (Convention), 1926-ஆம் ஆண்டில் இராமகிருஷ்ண இயக்கத்தின் தலைமை நிலையமாகிய பேலூரில் கூடியது. நாட்டின் பல பாகங்களிலுமுள்ள ஸ்ரீராமகிருஷ்ண மிஷனைச் சேர்ந்த அன்பர்கள் ஒருவருக்கொருவர் தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்வதும், அவர்களிடையே சகோதர மனப்பான்மையை வளர்ப்பதும், ஒற்றுமையுடன் இயங்கி இராமகிருஷ்ண—விவேகானந்த இயக்கத்தை மக்களிடையே உத்வேகத்துடன் பரப்புவதும் முதல் மாநாட்டின் நோக்கமாக விளங்கியது. அந்த மாநாட்டின்போது ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் தலைவராக சுவாமி சிவானந்தரும் செயலாளராக சுவாமி சாரதானந்தரும் விளங்கினர். அவர்களுடன் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சீடர்களாகிய சுவாமி அகண்டானந்தர், விஞ்ஞானனந்தர் ஆகியோரும் அம்மாநாட்டில் கலந்து கொண்டனர் துறவிகளும் ஏராளமான பக்தர்களும் கலந்துகொண்ட அந்த மாநாட்டில் அன்பர்கள் கேட்ட கேள்விகளுக்கு மிஷனைச் சேர்ந்த அனுபவம் மிக்க முதிய துறவிகள் தக்க பதில் அளித்தார்கள். மாநாட்டின் சார்பாக அப்போது நடைபெற்ற கருத்தரங்குகளில் அறிஞர்கள் பலரும் தங்கள் கருத்தைத் தெரிவித்தனர்.

இத்தகைய பயனுடைய ஒரு மாநாட்டை இப்போதைய சூழ்நிலைகளை முன்னிட்டு இரண்டாம் முறையாக ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் கூட்ட முடிவு செய்திருக்கிறது. இந்த இரண்டாவது மாநாடு 1980ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் பேலூரில் நடைபெறும்.

**ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் பெயரால் இயங்கிவரும் பல தனி ஸ்தாபனங்களோடு ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் நெருங்கிய தொடர்பு கொண்டு அந்த ஸ்தாபனங்களை ஊக்குவிக்க வேண்டும் என்பதே இப்போது கூடவிருக்கும் இந்த மாநாட்டின் முக்கிய நோக்கமாகும்.** எனவே இந்த வகையிலான தனிப்பட்ட ஸ்தாபனங்களின் முகவரிகளையும் அவற்றின் பணிகளையும் குறித்து மயிலாப்பூர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்திற்கு எழுதித் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

இந்த மாநாட்டின் செயற்குழு எல்லா அன்பர்களையும் அங்கத்தினர்களாகக் கலந்து கொள்ளும்படி அழைக்கிறது. தாய்மார்களுக்கும் தனி வசதிகள் உண்டு. உலகின் பல்வேறு பாகங்களிலும் உள்ள பக்தர்களைச் சந்திக்கவும், ஸ்ரீ ராமகிருஷ்ண—விவேகானந்த இயக்கத்தை மேலும் வலிமைப்படுத்தவும் இம் மாநாடு அன்பர்களுக்கு நல்லதொரு வாய்ப்பாக அமையும். மாநாட்டில் கலந்து கொள்ள விரும்புவோர் உணவு, இருப்பிடம் ஆகியவற்றிற்குக் கட்டணம் செலுத்த வேண்டும்.

இந்த மாநாட்டில் கலந்துகொள்ள விரும்புபவர்கள் அதற்குரிய நிபந்தனைகளை எங்களுக்கு எழுதிப் பெறலாம்.

1926-இல் நடைபெற்ற முதலாவது மாநாட்டின் அறிக்கை, நூல் வடிவில் வெளிவந்துள்ளது. ரூ. 25 விலையுள்ள இந் நூலின் விற்பனைத் தொகை நடைபெற இருக்கும் மாநாட்டின் பணிகளுக்குப் பயன்படுத்தப்படும்.

மேனேஜர்

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**

**மயிலாப்பூர், சென்னை–600 004.**



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை
—திருமூலர்

| தொகுதி 59 | சித்தார்த்தி ஸூ ஆனி மீ | இதழ் 6 |
|---|---|---|




भक्तिं मुहुः प्रवहतां त्वयि मे प्रसङ्गो भूयादनन्त महताममलाशयानाम् ।
येनाञ्जसोल्बणमुरुव्यसनं भवाब्धिं नेष्ये भवद्गुणकथामृतपानमत्तः ॥

பக்திம் முஹு: ப்ரவஹதாம் த்வயி மே ப்ரஸங்கோ
பூயாதநந்த மஹதாமமலாசயாநாம் |
யேநாஞ்ஜஸோல்பணமுருவ்யஸநம் பவாப்திம்
நேஷ்யே பவத்குணகதாம்ருதபாநமத்த: ||

—ஸ்ரீமத் பாகவதம், 4-9-11

ஹே அனந்த சொரூபியே! உமது குணவைபவங்களைக் கூறுகிற கதாம்ருதத்தையே பருகி, அதனால் மெய்ம்மறந்த நிலையிலே இருக்கிற மகான்களுடைய கூட்டுறவினாலேயே துன்பங்கள் நிறைந்த இந்தச் சம்சாரக் கடலைக் கடந்துவிடலாம் அல்லவா? ஆகையினாலேயே, பிரபோ! தங்களிடம் இடையறாத அன்பு கொண்டுள்ள தூய உள்ளம் படைத்த சாதுக்களுடைய சத்சங்கத்திலேயே இருக்க எனக்கு அருள் புரிவாயாக! அதனால், எனது இதயத்திலே பக்தி வெள்ளமானது தங்கு தடையின்றிப் பெருகி ஓடட்டும்.

வேதநூற் பிராயம் நூறு
மனிசர்தாம் புகுவ ரேலும்;
பாதியும் உறங்கிப் போகும்;
நின்றதிற் பதினை யாண்டு
பேதை பாலகன்அது ஆகும்;
பிணி, பசி, மூப்புத் துன்பம்;
ஆதலால், பிறவி வேண்டேன்;
அரங்கமா நகரு ளானே!

—தொண்டரடிப்பொடியாழ்வார்.



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**ஞாயிறு, ஏப்ரல் 8, 1883**

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** கர்த்தாபாஜா சம்பிர தாயத்தை சேர்ந்தவர்கள் மந்திர தீட்சை தரும் போது 'இப்போது மனம் உன்னுடையது' என்று சொல்லுவார்கள். அதாவது 'இனிமுதற்கொண்டு எல்லாம் உன் மனதைப் பொறுத்தே அமையும்' என்பது அதன் பொருளாகும். 'எவருடைய மனம் நல்லதோ அவருக்கு அவருடைய கருவி கரணங்க ளும் சாதகமாகவே அமையும்; அதோடு அவர் நல்ல ஆன்மிகப் பயனையும் பெறுவார்' என்று அவர்கள் சொல்வார்கள்.

தமது உயர்ந்த மனநிலையின் காரணமாகவே ஆஞ்சனேயர் சமுத்திரத்தைக் கடந்து சென்ருர். 'நான் ராமருடைய தாசன்; நான் ராமநாமத்தை உச்சரிப்பவன். என்னுல் சாதிக்க இயலாத காரியம் ஏதேனும் உண்டா?'— என்று எப்படிப்பட்ட உறுதி யான நம்பிக்கை ஆஞ்சனேயருக்கு இருந்தது!

அகங்காரம் உள்ளவரையில் அஞ்ஞானமும் இருக்கும். அகங்காரம் இருக்கும் வரையிலும் முக்தி கிடைப்பதற்கு வழியில்லை.

மாடு 'ஹம்மா, ஹம்மா' என்று கத்துகிறது. ஆடு 'மே, மே' என்று கத்துகிறது. அது காரணமாகவே அவைகளுக்கு எவ்வளவு துன்பம் ஏற்படுகிறது! முதலில் கசாப்புக் கடைக்காரன் அவற்றை வெட்டுகிருன். பிறகு அவற்றின் தோலைக் கொண்டு செருப்பு, மிருதங்கம் போன்றவற்றைத் தயாரிக்கி ருர்கள். அவ்வளவுக்குப் பிறகும்கூட அவற்றின் துன்பங்களுக்கு ஒரு முடிவே இல்லை. இந்தி மொழியில் 'ஹாம்' என்ருல் நான் என்று பொருள். 'மே' என்றுலும் நான் என்றுதான் அர்த்தம். அவ்விதம் 'நான், நான்' என்று சொல்வதால் எவ்வளவு துன்பங்களுக்கு ஆளாக வேண்டி யிருக்கிறது! கடைசியாக அவற்றின் நரம்பு, குடல் ஆகியவைகளைக் கொண்டு பஞ்சடிக்கும் வில் தயாரிக்கிருர்கள். அந்த வில்லை உபயோகிக்கும் போது 'துஹு, துஹு' என்ற சப்தம் உண்டாகிறது. அதாவது 'நீயே, நீயே' என்பது அதன் பொருள். 'நீயே, நீயே' என்று சொல்ல ஆரம்பித்த பிறகு அதற்கு விடுதலை ஏற்பட்டுவிடுகிறது. அதன் பிறகு மேலும் அவை துன்பங்களுக்கு ஆளாவதில்லை. 'இறைவா! நீயே கர்த்தா, நான் அகர்த்தா மட்டுமே ஆவேன்' என்னும் இந்த உணர்வுதான் ஞானமாகும்.

பணிவுடன் இருந்தால்தான் உயர்ந்த நிலையைப் பெற முடியும். சாதகப்பறவையின் கூடு கீழேதான் இருக்கிறது. ஆனுல் அது ஆகாயத்தில் மிகமிக உயரத்தில் பறக்கிறது. மேடான நிலத்தில் பயிர் செய்ய முடியாது. பள்ளமான இடத்தில்தான் பயிர் செய்ய முடியும். அங்கு தண்ணீர் தேங்குவதோடு பயிர் செய்வதும் சுலபமாக இருக்கும்.

ஒரு சிறிது முயற்சியை மேற்கொண்டாகிலும் சத்சங்கத்தில் ஈடுபட வேண்டும். குடும்பத்தில் எப்போதும் இலௌகிகப் பேச்சுதான் இருக்கிறது. இந்த நோய் சதா காலமும் இருந்துகொண்டே யிருக்கிறது. கிளி, கூண்டில் வசிக்கும் போது 'ராம், ராம்' என்று சொல்கிறது. ஆனுல் அது காட்டில் பறந்து செல்லும்போது 'கீ, கீ' என்று முன்பு போலவே கத்த ஆரம்பித்துவிடும்.

பணம் இருப்பதாலேயே ஒருவன் பெரிய மனிதன் ஆகிவிடமாட்டான். உண்மையான பெரிய ஒரு மனிதனின் வீட்டிற்கு அறிகுறி ஒன்று உண்டு. அது என்னவென்ருல், அவனுடைய வீட்டின் எல்லா அறைகளிலும் விளக்குகள் ஏற்றப்பட்டிருக்கும். ஏழை மனிதனுல் அதிகமாக எண்ணெய் வாங்க முடியாது. அது காரணமாக அவனுல் பல விளக்குகள் எரிவதற்கு ஏற்பாடு செய்ய இயலாது. இந்த உடலாகிய ஆலயத்தை இருள் சூழ்ந்ததாக வைத்திருக்கக் கூடாது. அதில் ஞானதீபத்தை ஏற்றி வைக்க வேண்டும். ஒவ்வொருவரும் ஞானத்தைப் பெறலாம். ஜீவாத்மா, பரமாத்மா என்று இரண்டு தத்துவங்கள் இருக்கின்றன. பிரார்த்தனை யின் மூலம் எல்லா ஜீவான்மாக்களுமே பரமாத்மா வுடன் இணைந்திருக்கக்கூடும். ஒவ்வொருவீட்டுக்கும் விளக்கு எரிவதற்கு வேண்டிய ஆவி வரும் குழாய்

ஒன்று உண்டு; அதன் மூலமாக அந்த ஆவியைத் தயார் செய்யும் சங்கத்தாருக்குரிய முக்கியமான ஆவி — சேமிப்பு நிலையத்திலிருந்து ஆவியைப் பெற்றுக்கொள்ளலாம். அந்த நிலையத்திற்கு மனு செய்தால், உங்களுக்கு வேண்டிய ஆவியை அனுப்பி வைக்க அங்குள்ளவர்கள் ஏற்பாடு செய்வார்கள். அப்போது உங்கள் வீட்டிலும் விளக்கு எரியும். அதன் அலுவலகம் சியால்தஹவில் இருக்கிறது. (எல்லோரும் சிரித்தல்)

சிலரிடம் ஏற்கனவே சைதன்யம் உதித்திருப்ப துண்டு. ஆனால் அவர்களிடம் சில விசேஷ அடையாளங்கள் காணப்படும். அவர்களுக்கு கடவுளைத் தவிர வேறு எதையும் பற்றிக் கேட்பதோ பேசுவதோ ருசிப்பதில்லை.

அவர்கள் சாதகப் பறவையைப் போன்றவர்கள்; அது தன்னருகே ஏழு கடல்களும் கங்கையும் யமுனையும் மற்ற நதிகளும் நீர் நிரம்பியிருப்பதைப் பார்த்தாலும், மழை நீரை மட்டுமே விரும்பும். அதன் தொண்டை தாகத்தால் வறண்டு வெடித்தாலும் அது மழை நீரைத் தவிர வேறு எதையும் அருந்தாது.

பாட்டுப் பாடும்படி குருதேவர் கூறினார். அவ்விதமே ராம்லாலும் காளி கோவிலில் வேலை பார்த்து வந்த ஒரு பிராம்மணரும் பாடினர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (பக்தர்களை நோக்கி) : ஒரு புலி மற்ற மிருகங்களை அடித்து விழுங்கிவிடுகிறது. அது போலவே ஆழ்ந்த பக்தி என்னும் புலி காமம், குரோதம் போன்ற எல்லா எதிரிகளையும் விழுங்கி விடுகிறது. கடவுளிடம் ஒரு தடவை தீவிரமான பக்தி உண்டாகிவிட்டால் காமம், குரோதம் ஆகியவை மறைந்தே போய்விடும். ஸ்ரீகிருஷ்ணரிடம் கொண்டிருந்த மனப்பூர்வமான ஆழ்ந்த பக்தியின் காரணமாக கோபியர்களுக்கு இந்த உயர்ந்த நிலை ஏற்பட்டிருந்தது.

'அனுராக அஞ்சனம்' என்ற ஒரு மை இருக்கிறது. ஸ்ரீமதி ராதை 'தோழி! எல்லாத் திசைகளிலும் நான் கிருஷ்ணமயமாகவே காண்கிறேன்' என்று சொன்னாள். அதற்குப் பதிலாக அந்தத் தோழி, 'ராதையே, நீ உன் கண்களில் அனுராக அஞ்சனத்தைத் தடவிக் கொண்டிருக்கிறாய். ஆகவேதான் நீ இவ்விதம் எல்லாத் திசைகளிலும் கிருஷ்ணமயமாகவே காண்கிறாய்' என்று பதில் கூறினாள்.

தவளையின் மண்டையைச் சுட்டுச் சாம்பலாக்கி அதைக் கொண்டு மை தயாரித்து, அந்த மையைக் கண்களில் தடவிக் கொண்டால் எல்லாத் திசை களிலும் பாம்பு மயமான காட்சியே தென்படும் என்று சொல்வார்கள்.

வெறும் காமினி காஞ்சனத்தில் மட்டுமே உழன்று கொண்டிருப்பவர்கள், ஈசுவரனை ஒரு தடவைகூட நினைக்காதவர்கள் — ஆகிய இவர்களே பத்த (பந்தப்பட்ட)ஜீவர்கள் ஆவர். அவர்கள் காக்கைக் கொத்திய மாம்பழம் போன்றவர்கள். அந்த மாம்பழம் இறைவனுக்குப் படைக்கவும் உதவாது; அதைத் தின்பதற்கு நாமும் தயங்குவோம்.

பந்தத்திற்கு உட்பட்ட ஜீவர்கள், லௌகிகத்தில் உழலும் மக்கள் பட்டுப்பூச்சியைப் போன்றவர்கள். பட்டுநூற் புழுக்கள் விரும்பினால் தாம் பின்னும் உறையைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்துவிட முடியும். ஆனால் 'தாமே பின்னிய உறை' என்னும் பற்றுதல் அளவுக்கு மீறி இருப்பது காரணமாக அந்த உறையை விட்டு வெளியே வர அவற்றால் இயலுவ தில்லை. அதன் முடிவு, அந்தப் பட்டுப்பூச்சிகள் அங்கேயே சாகின்றன!

முக்த ஜீவர்கள், விடுதலை பெற்றுவிட்ட மக்கள் காமகாஞ்சனப் பற்றுகளின் வசத்தில் இருக்க மாட்டார்கள். அபூர்வமாக ஒரு சில பட்டுநூற் புழுக்கள் எவ்வளவோ மிகுந்த முயற்சி செய்து, தாமே செய்த உறையைத் துளைத்துக் கொண்டு வெளியே வந்து விடுவதும் உண்டு. ஆனால் அப்படி வெளியே வரும் பட்டுநூற் புழுக்கள் ஏதோ ஒன்றிரண்டு மட்டுமே ஆகும்.

மாயைதான் மக்களை மயக்கி விடுகிறது. ஏதோ ஓரிருவர் மட்டுமே ஞான விழிப்புப் பெற்று, மாயை யின் மயக்கத்தால் மோகமடையாதவராகிறார்கள். அவர்கள் மாயையின் தந்திர ஜாலங்களுக்கு உட்படுவதில்லை. அவர்கள் காமினி காஞ்சனங் களுக்கு வசப்படுவதில்லை. ஜால வித்தைக்காரனு டைய வீட்டார் அவனுடைய எல்லா வித்தை ரகசியங்களையும் நன்கு அறிவார்கள். அவனு டைய 'ட்யாம், ட்யாம்' சத்தங்களைக் கேட்டு அவர்கள் மயங்கி விடுவதில்லை. ஜாலவித்தைக் காரன் என்னென்ன செய்கிறானோ அதன்தந்திரங் களெல்லாம் அவர்களுக்கு நன்கு தெரியும்.

சாதன சித்தர்கள் (ஆன்மிக சாதனைகளைப் பழகுவதினால் பூரணமடைபவர்கள்), கிருபை சித்தர்கள் என்று சாதகர்கள் இரண்டு வகைப் படுவர். சில குடியானவர்கள் மிகவும் பாடுபட்டுத் தங்கள் வயல்களுக்கு நீர் கொண்டுவந்து சேர்க்

கிறார்கள். அப்படிச் செய்வதனால்தான் அவர்களுக்குப் பயிர்கள் விளையும். ஆனால் வேறு சிலருக்கோ பாடுபட்டு நீரைப் பாய்ச்ச வேண்டிய தேவையே ஏற்படுவதில்லை. அவர்களுடைய வயல்கள் மழையால் நீர்ப்பெருக்கைப் பெறுகின்றன. அவர்களுக்குச் சிரமப்பட்டு நீரைக் கொண்டுவர வேண்டிய நிலைமையே ஏற்படுவதில்லை. மாயையின் பிடியிலிருந்து தப்ப வேண்டுமானால் ஒருவன் மிகவும் பாடுபட்டு ஞான சாதனம் பழக வேண்டியது கட்டாயமாகிறது. ஆனால் கடவுளின் அருளால் முக்தி அடையும் கிருபை சித்தர்களுக்கோ எந்தவித உழைப்பையும் மேற்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. ஆனால் அப்படிப்பட்ட கிருபை சித்தர்கள் உண்மையாகவே மிகச் சிலர்தான் இருக்கிறார்கள்.

இன்னும் நித்திய சித்தர் (நித்திய முக்தர்) என்னும் மற்றொரு வகையினரும் இருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொரு பிறவியிலும் பிறக்கும்போதே பூரண ஞானம் உதிக்கப் பெற்றவராய் விளங்குகின்றனர். ஒரு நீரூற்றில் கண் அடைப்பட்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். கொல்லன் இங்கும் அங்கும் தோண்டி பல காரியங்களையும் கவனித்து வரும்போது தற்செயலாக அந்த நீரூற்றின் கண்ணைத் திறந்து விட்டுவிடுகிறான். அப்போது ஊற்றுநீர் கள கள என்று சப்தமிட்டபடி வெளியே பாய்கிறது! ஒரு நித்திய சித்தருக்கு முதல் முறையாக கடவுளின் மீது ஏற்படும் ஆழ்ந்த பக்தியின் தீவிரத்தை (அனுராகம்) மக்கள் பார்க்கும்போது பெரிதும் ஆச்சரியமடைகிறார்கள். 'இவ்வளவு பக்தியும் வைராக்கியமும் பிரேமையும் எங்கிருந்து வந்தன?' என்று அவர்கள் சொல்கிறார்கள்.

**பேச்சு** அனுராகம் எனப்படும் கடவுளிடம் கொள்ளும் ஆழ்ந்த பக்தியைக் குறித்து எழுந்தது. உதாரணமாகப் பிருந்தாவனத்துக் கோபியர் பெற்றிருந்த உயர்ந்த பக்தியை ஸ்ரீராமகிருஷ்ணர் குறிப்பிட்டார்.

மீண்டும் பாட்டுத் துவங்கியது. ராம்லால் பாடினார்:

என்பரம! எனக்கெல்லாச் செல்வ மும்நீ
இன்னுயிர்க்கும் உயிராவாய் உள்ளுக் குள்ளே
மன்னுலக மூன்றினிலும் நின்னை யல்லால்
மனமார எனக்குரியார் யாரு மில்லை;
பன்னுமொரு சாந்தியும்நீ, இன்பம் ஆசை
பலவும்நீ எனக்காவாய், செல்வம் சீரும்
துன்னருநல் லாதரவும் நீயே அன்றோ?
தூமறையின் ஞானமும் நீ, சக்தி நீயே.
நீயேயென் ஓய்விடமால், இல்லம் நீயே,
நேசமிகும் நண்பனும் நீ, உற்றார் நீயே
ஏயுமிந்த நிகழ்காலம், சேரும் காலம்
இருஞ்சொர்க்கம், பேசருநல் முக்தி நீயே,
தூயமறை யாதியநூல் யாவும் நீயே,
தொடக்கறுக்கும் கட்டளைகள் எற்கு நீயே,
வாயும்நல அருள்முகிலாம் ஆசான் நீயே
வாழ்விலா இன்பஇள வேனில் நீயே.

நன்னெறியும் கொள்குறியும் நீயே யாவாய்,
நான் வணங்கற் குரியபர தெய்வம் நீயே,
மெல்னெஞ்சம் கனிவுற்ற அன்னை நீயே,
வேண்டுங்கால் கண்டிக்கும் தந்தை யும்நீ,
மன்னுலகம் படைப்பானும் காப்பா னும்நீ,
வாழ்க்கையெனும் பெருங்கடலைத் தாண்டி யப்பால்
என்னுடைய படகினைநீ உய்க்க வல்லாய்
எல்லாமும் எனக்காவாய் எந்தாய் கோவே.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (பக்தர்களிடம்): ஆகா! என்ன அருமையான பாட்டு! 'எனக்கெல்லாச் செல்வமும் நீ'—என்ன அற்புதக் கருத்து! அக்ரூரர் வந்து சேர்ந்த பிறகு கோபியர் ஸ்ரீமதி ராதையிடம் 'ராதையே! உன்னுடைய எல்லாச் செல்வங்களையும் அபகரித்துச் செல்ல இவர் வந்திருக்கிறார்!' என்று தெரிவித்தார்கள். பகவானிடம்தான் அவர்களுக்கு எப்படிப்பட்ட ஒரு பக்தி இருந்தது! பகவானுக்காக அவர்கள் உள்ளம் எப்படி துடிதுடித்தது!

ராம்லால் மறுபடியும் பாடினார்:

நிறுத்தாதே, நிறுத்தாதே, தேர்ச்சக்கரத்தை,
தேர் செல்லுவது சக்கரத்திலா என்ன!
சக்கரத்தை இயக்குபவன் ஹரியன்றோ,
அவருடைய சக்கர வேகத்திலன்றோ
உலகம் இயங்குகின்றது

**பாட்டைக்** கேட்டுக்கொண்டே குருதேவர் ஆழ்ந்த சமாதியில் மூழ்கினார். பக்தர்கள் வாய் பேசாமல் ஒரே பார்வையுடன் அவரைப் பார்த்தபடி இருந்தனர். ஒரு சிறிதும் பேச்சு மூச்சு இல்லாமல் குருதேவர் சமாதியிலேயே ஆழ்ந்திருந்தார். அவருடைய உடல் அசையாதிருந்தது. படத்தில் காண்பது போலக் கைகளைக் கோர்த்தவாறு அவர் அமர்ந்திருந்தார். அவரது கண்களின் ஓரத்திலிருந்து ஆனந்தக் கண்ணீர் பெருகியபடி இருந்தது. ❋




# புத்தரும் தம்மபதமும்

பகவான் புத்தர் உன் பாவங்களைக் கழுவிவிட மாட்டார்; பகவான் புத்தர் உன்னைப் பாவங்களிலிருந்து விடுவிக்க மாட்டார்; உனக்குப் பதில் தாம் பிணையாக வந்து நிற்க மாட்டார்; பகவான் புத்தர் நாம் கடைத்தேறுவதற்குரிய மார்க்கத்தைத்தான் காட்டியிருக்கிறார்.

—திபேத்திய தலாய் லாமா

சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்பு கி.மு. 563 இல் புத்தர்பெருமான் அவதரித்தார். சீரும் சிறப்புமாக வளர்க்கப்பட்ட அவர் தமது வாழ்க்கையில் ஒரே ஒரு முறை வயோதிகன், நோயாளி, மரணம், துறவி ஆகியோரைக் கண்டார். அவையே அவரது வாழ்க்கையில் மிகப்பெரிய மாற்றத்தை, திருப்பு முனையை உண்டாக்கின. புத்தர் கண்ட அதே நான்கு காட்சிகளை நாமும் நமது வாழ்நாளில் எத்தனை எத்தனையோ முறை பார்த்து வருகிறோம். ஆனால் நமது வாழ்க்கையில் அவை திருப்பு முனையாக அமையவில்லையே; நமது உள்ளத்தில் அவை ஆழ்ந்து பதியவில்லையே; ஏன்? அதற்கு விடையாக ‘நல்ல மாட்டுக்கு ஓர் அடி; நல்ல மனிதனுக்கு ஒரு சொல்’ என்ற பழமொழிதான் நினைவுக்கு வருகிறது.

தமது இருபத்தொன்பதாம் வயதில் துறவறம் மேற்கொண்ட புத்தர், ஆறு ஆண்டுகள் கடுந்தவம் பயின்று புத்தர் என்னும் மெய்ஞ்ஞானம் பெற்ற நிலையை எய்தினார். அதன் பிறகு 45 ஆண்டுகள் தமது போதனைகளின் உருவமாகவே வாழ்ந்திருந்து பௌத்த தர்மப்பிரசாரத்தை முன்னின்று நடத்தியிருக்கிறார். புத்தர் அவதரித்தது, மெய்ஞ்ஞானம் பெற்றது, பூவுலகிலிருந்து மறைந்தது ஆகிய மூன்றுமே வைகாசிப் பௌர்ணமி நாளன்று நிகழ்ந்திருக்கின்றன. ஆகவே, வைகாசிப் பௌர்ணமி நாள் மூன்று விதங்களிலும் பௌத்தர்களுக்கு ஒரு புனிதமான நன்னாள் ஆகும்.

புரோகிதர்களின் கொடுங்கோன்மையை அடியோடு தகர்த்து மதத்தில் உண்மையான மறுமலர்ச்சியைக் கண்டவர் புத்தரே ஆவார். ஜாதி வேறுபாடின்றி ஆண் பெண் யார் வேண்டுமானாலும் துறவறம் மேற்கொள்ளலாம் என்று துணிவாகச் சொல்லி, அதைச் செயலிலும் காட்டிய முதல் சமயத் தலைவரும் புத்தரேதாம்.

கர்மவிதியையும் நிலையாமையையும் புத்தர் அழுத்தம் திருத்தமாகப் போதித்தார். மரணத்தோடு எல்லாமே முடிந்து போவதில்லை; மறுமை உண்டு என்பதைப் புத்தர் அருளிய கதைகளும் உபதேசங்களும் புலப்படுத்துகின்றன. மனித வாழ்க்கை இன்னதுதான் என்று எடுத்துக் காட்டி, ‘இன்ன வழிகளில் செல்; இன்ன வழிகளைத் தவிர்த்துவிடு; அதன்படி செய்தால் மேலான நிலையைப் அடைவாய்’ என்று புத்தர் கூறிய வழிகளைப் பின்பற்றி மேலான நிலையைப் பலர் அடைந்திருக்கிறார்கள்.

மனிதனின் துன்பங்களுக்கு ஓர் எல்லையே இல்லை. இதைத் தெளிவாக உணர்ந்த புத்தர், அந்தத் துன்பங்களுக்கு ஒரே முடிவு, ஒரே முற்றுப்புள்ளி நிர்வாணம் என்னும் முக்திநிலையைப் பெறுவதுதான் என்று கண்டார். துக்கம், துக்க உற்பத்திக்குக் காரணம், துக்க நிவாரணம், துக்க நிவர்த்திக்கு வழி பற்றிய உண்மைகளை ஆராய்ந்து அன்றைய மக்கள் மொழியாக விளங்கிய பாலி மொழியில் ஐயம்திரிபற விளக்கினார். நாடு தழுவிய வகையில் மக்கள் மொழியில் மதப்பிரசாரம் செய்த முதலாமவரும் அவரே ஆவர்.

பௌத்த பிக்குகளுக்கும் பொது மக்களுக்கும், ஜாதகக் கதைகள் வாயிலாகவும் அறிவுரைகள் வாயிலாகவும் புத்தர் பல அரிய உபதேசங்கள் செய்திருக்கிறார். புத்தரின் உவமைகள், ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் உவமைகளை நினைவுபடுத்துகின்றன.

புத்தர் பல்வேறு சந்தர்ப்பங்களில் அருளிய உபதேசங்களின் தொகுப்பே தம்மபதம் (அறவழி) என்னும் தொகுப்பு நூலாக இப்போது வழங்கி வருகிறது.

இந்து மதத்திற்கு உபநிடதங்கள், கீதை, பிரம்ம சூத்திரம் ஆகிய மூன்றும் பிரமாண நூல்களாக விளங்குவது போல பௌத்த மதத்திற்குத் திரிபிடகம் என்று சிறப்பித்துக் கூறப்படும் ஸுத்த பிடகம், வினய பிடகம், அபிதம்மபிடகம் ஆகிய மூன்றும் பிரமாண நூல்களாக விளங்குகின்றன.

மகாபாரதத்தில் ஒரு பகுதியாக அமைந்த கீதையைப் போல, ஸுத்தபிடகத்தின் ஐந்து நிக்காயங்களில் ஒன்றாகிய குத்தக நிக்காயம் என்னும் பிரிவில் ஒரு பகுதியாக, தம்மபதம் அமைந்திருக்கிறது. பல பிரிவுகளையுடைய இந்து மதத்தில் கீதை முதலிடம் பெற்றிருப்பதைப் போல, பதினெட்டு உட்பிரிவுகள் கொண்ட பௌத்த மதத்தில் தம்மபதமே முதலிடம் வகிக்கிறது.

தம்மபதத்தில் இருபத்தாறு அத்தியாயங்களில் 423 உபதேசங்கள் அடங்கியுள்ளன. ராமாயணம், மகாபாரதம் மற்றும் இந்துமதப் புராணங்கள் போல் பெரிதாக இல்லாமல் 423 உபதேசங்கள் மட்டுமே அடங்கிய நூல் தம்மபதம் என்னும்போது 'அடேயப்பா! மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிதாக இருக்கிறதே!' என்ற எண்ணம் தோன்றுகிறது.

ஒரே கருத்தை உடன்பாட்டு முறையிலும் எதிர்மறையாகவும் கூறும் முறை 'இரட்டைச் செய்யுள் இயல்' எனப்படும். உதாரணமாக, 'நன்கு கூரை வேயப்படாத வீட்டினுள் மழைநீர் புகுவதைப் போல, பயிற்சி மூலம் பண்படாத மனதினுள் தீய ஆசைகள் புகுந்துவிடுகின்றன' என்று தம்மபதம் உபதேசம் பதின்மூன்றில் பார்க்கிறோம். அதற்கு அடுத்த பதினான்காம் உபதேசம்-'நன்கு கூரை வேய்ந்த வீட்டினுள் மழைநீர் புகாததைப் போல, நன்கு பயிற்சி பெற்ற மனதினுள் தீய ஆசைகள் புக முடியாது' என்று அமைந்திருக்கிறது.

இவ்விதம் உடன்பாடாகவும் எதிர்மறையாகவும் கூறும் முறை தம்மபதம் நெடுகிலும் விரவியிருக்கிறது. சில கருத்துக்களை உடன்பாட்டு முறையில் சொன்னாலே போதும். சிலவற்றை எதிர்மறையாகவும் சொல்லும்போதுதான் சொல்லப்படும் கருத்தின் சிறப்பு நம் உள்ளத்தில் நன்கு பதிகிறது. இரண்டு முறைகளுமே இடம்பெற்றுள்ள சிறப்பைப் பெற்ற இந்த நூல் பலநூறு ஆண்டுகளாக எண்ணற்ற மக்களின் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தியுள்ளது. இனியும் அதன்பணி அவ்விதமே அமையும்.

புத்தர் மறைந்து சில நூற்றாண்டுகள் கழிந்த பிறகே பௌத்த சங்கத்தினரால் தம்மபதம் தொகுக்கப்பட்டது. எனவே, அது வரையிலும் பௌத்த சங்கத்தில் ஒருவர் மற்றொருவருக்குச் சொல்லச் செவி வழியாக வழங்கி வந்த இந்த உபதேசங்களில், சங்கத்தைச் சேர்ந்த தத்துவ மேதைகளின் இடைச் செருகல்களும் இருப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது என்று நவீன காலத்தைச் சேர்ந்த அறிஞர் பலரும் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். எனினும் அந்த இடைச் செருகல்களும் பகவான் புத்தரின் மையக் கருத்துக்களிலிருந்து பிறழாதவைகளாகத்தான் இருக்கும் என்பதில் எவருக்கும் கருத்து வேற்றுமை இல்லை.

பௌத்த மதத்தின் ஆதார சுருதியாக விளங்கும் தம்மபதம் தொகுக்கப்பட்ட பிறகு கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் பாலி மொழியிலேயே பௌத்த சங்கத்தினரால் அதற்கு உரையும் வகுக்கப்பட்டது.

'ஆசையற்ற நிலையே பரமானந்தந்தைத் தர முடியும்' என்பதைப் புத்தர் மீண்டும் மீண்டும் அயராமல் தெளிவுபடுத்துகிறார். ''என் அருமைப் பிக்குகளே! பஞ்சபூதங்களின் சேர்க்கையால் உண்டான எந்தப் பொருளுக்கும் அழிவு உண்டு. இதை எப்போதும் நினைவில் இருத்திக்கொண்டு விழிப்புடன் இருங்கள். நிர்வாணப் பேற்றை அடைவதற்கு, உண்மையோடும் ஊக்கத்தோடும், உறுதியோடும் எப்போதும் முயலுங்கள்'' என்பது புத்தர் தமது மறைவிற்கு முன்பு உலகிற்கு வழங்கிய கடைசி உபதேசமாக அமைந்திருக்கிறது.

இவ்விதம், நிர்வாணம் என்னும் முக்திநிலையையே முடிந்த நிலையாகக் கூறும் புத்தர், அன்றாட நடைமுறை வாழ்க்கையில் எந்த அளவுக்கு நாம் தார்மிகப் பண்புகளுடன் வாழவேண்டும் என்பதைப் பல கோணங்களிலும் தம்மபதத்தில் கூறுகிறார். புத்தர் தம்மபதத்தைப் போதித்தபோது நாட்டில் நிலவிய சூழ்நிலைகளையும், பிற்காலத்தில் பௌத்தம் உலகின் பல பாகங்களிலும் வரவேற்கப்பட்டதை

யும் மனதில் கொண்டு தம்மபதத்தை நாம் படிப்பது அதன் சிறப்பை மேலும் தெளிவாக உணர வைக்கும்.

புத்தரின் அடிப்படைத் தத்துவங்களைத் தம்ம பதத்தின் மூலம் அறிகிறோம். எனினும் ஒழுக்கமே இதில் பிரதானமாகக் கூறப்பட்டிருக்கிறது. அதாவது ஏராளமாக விரிந்து பரந்துள்ள பௌத்த மதத் தத்து வங்களை விடவும் பௌத்த தர்மங்களையே, ஒழுக்க நெறிகளையே தம்மபதம் சிறப்பாகப் பெரிதும் வலியுறுத்துகிறது. இது காரணமாகவே கடவுள் பற்றிய கருத்தில் அவ்வளவாக அக்கறை கொள்ளாத பல மேலைநாட்டவர்களும், அறிவுப் பூர்வமாகப் புத்தர் எடுத்துக்காட்டிய ஒழுக்க நெறி களால் பெரிதும் கவரப்பட்டிருக்கிறார்கள்.

நடைமுறை வாழ்க்கைக்கு அச்சாணியாக விளங்குவது ஒழுக்கம். ஒழுக்கமின்மையே சமுதா யத்தில் காணப்படும் எல்லாக் கேடுகளுக்கும் வேராகிறது. மத நம்பிக்கையில்லாத நிலையில்கூட நல்லொழுக்கத்துடன் சிலர் வாழ்வது சாத்தியம். ஆனால் சீரிய ஒழுக்கமில்லாத நிலையில் மதவாழ்க்கை அமைவதற்குச் சாத்தியமே இல்லை. ‘சிலர் சமயத்தி லிருந்து ஒழுக்கத்தைப் பிரிப்பர். ஆனால் சமயமே வேர். அது இல்லாவிட்டால் ஒழுக்கம் வாடி வதங்கி விடும்’ என்று ஓர் அறிஞர் குறிப்பிட்டார். மனிதன் பெற்றிருக்க வேண்டிய முதலாவது பெரிய பண்பு ஒழுக்கம். அதன் பரிபூரண நிலையாகவே மனிதன் தெய்வமாகிறான்.

மனித சமத்துவம், நல்வினை தீவினை, அகிம்சை, பிராம்மணத்துவம், சகிப்புத்தன்மை, பொறுமை, அன்பு, தியாகம், கருணை, பொறாமையின்மை, புலனடக்கம், பகைவனுக்கும் அருளும் உள்ளம், கட்டுப்பாடு, உள்ளது உள்ளபடியே பொய்யைப் பொய்யாகவும் மெய்யை மெய்யாகவும் காணும் விவேகம், வெறும்சாஸ்திர அறிவால் மெய்ஞ் ஞானம் பெற இயலாது போன்ற அருள் வாழ்க்கைக்குப் பெரிதும் அவசியமான பல நிரந்தர உண்மைகளை அற்புதமான முறையில் தம்மபதம் கூறுகிறது. இந்த நூல் கூறும் பௌத்தமதக் கோட் பாடுகள் மனித குலம் முழுமையும், குறிப்பாக மெய்ஞ்ஞானம் பெற விரும்பும் ஒவ்வொருவரும் அவசியம் பின்பற்றத் தக்கவை. அவற்றை வாழ்கையில் பின்பற்றிப் பற்றற்ற உயரிய வாழ்க்கை வாழ்பவன் மரணத்தை அஞ்சாமல் எதிர்க் கொள்வ தோடு, அழியும் உடலைப் பயன்படுத்தி அழியாத அமர நிலையையும் எய்துவான்.

பற்றின்மையே, ஆசையின்மையே அடைதற் கரிய பெருஞ்செல்வமாகும். ஆசையை—அது சிறியதாக இருந்தாலும் பெரியதாக இருந்தாலும் — ஒவ்வொரு கட்டத்திலும் அடக்கும்போது ஒருவன் தான் இருக்கும் நிலையிலிருந்து ஒரு படி உயர்ந்து விடுகிறான். ‘ஆசையே துன்பத்திற்குக் காரணம்; ஆசையை ஒழித்தால் பெருநிலை பெறலாம்’—இரத் தினச் சுருக்கமாக அமைந்துள்ள புத்தரின் இந்த ஒரே ஒரு கருத்து நம் மனதில் ஆழ்ந்து பதிந்தாலே ஏனைய நற்குணங்கள் பலவும் ஒன்றன்பின் ஒன்றாக அணிகலன்களாக நம்மிடம் அமைந்துவிடும் .எல்லா ஆசைகளிலிருந்தும் விடுவித்துக்கொண்டு முக்தி யைப் பெறுவதிலேயே கருத்துடன் இருப்பவன் புத்தரைப் பின்பற்றுபவனே ஆவான்.

மனதை ஒருமுகப்படுத்துவது, தியானம், கர்ம விதி, முக்தி, முக்திக்குச் சீரிய தார்மிக வாழ்க்கை ஒரு சாதனம், துறவறம் போன்ற கருத்துக்களைத் தம்மபதத்தில் படிக்கும்போது ஓர் இந்துமத சாஸ்திரத்தைப் படிக்கும் உணர்வுதான். மேலோங்கி நிற்கிறது.

இந்து மதத்தின் கர்மவிதியை அப்படியே ஏற்றுக் கொண்ட புத்தர் நற்செயல், நல்லெண்ணம் முதலிய வற்றைக் கடைப்பிடித்தலே ஒருவனை அவை உயர் நிலைக்கு, அதாவது பிறவாப் பெருநிலைக்கு உயர்த்தி விடும் என்றார். வீடுபேற்றை அடைவதில் சுய முயற்சிக்கு உரிய முக்கியத்துவத்தை அவர் பெரிதும் வலியுறுத்தினார்.

புத்தர் தவவாழ்க்கையில் ஈடுபட்டபோது, “என் னுடைய உடல் இந்த இருக்கையிலேயே வற்றிப் போனாலும் சரி, அதிலுள்ள சதையும் எலும்புகளும் அற்றுப்போனாலும் சரி, ஞானத்தைப் பெறாமல் இந்தச் சரீரம் இங்கிருந்து எழுந்திராது” என்ற உறுதி யுடன் தவம் பழகி ஜீவன்முக்தி என்று இந்துமதம் குறிப்பிடும் மெய்ஞ்ஞான நிலையைப் பெற்றார். மத வாழ்க்கையில் சோம்பலுக்கே இடமில்லை; ஒழுக்க வாழ்க்கையில் மிகமிக விழிப்புத் தேவை. ஆகவே சுயமுயற்சியை அவர் பிரதானமாக வலியுறுத்தி யிருக்கிறார்.

புத்தர் சொல்லும் கர்மவிதி, ‘ஒருவன் தனது விதியைத் தானே உருவாக்கிக் கொள்கிறான்; எனவே தன்னம்பிக்கையுடன் உன் விதியை நீயே உருவாக்கு; யாரும் உனக்கு உதவ முடியாது; உனக்கு நீயே உதவி செய்து கொள்; உனது ஈடேற்றத்தை நீயே தேடிக்கொள்’ என்னும் கருத்தை உள்ளங்கை நெல்லிக்கனி போல் மிகத் தெளிவாக விளக்குகிறது.

மறுபிறப்பு, கர்மவிதி ஆகியவைபற்றிய கருத்துக்களை பௌத்தம் ஆணித்தரமாகக் கூறுகிறது. அந்தக் கருத்துக்கள் ஆத்ம சாதகர்களின் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதிய வேண்டியவை ஆகும்.

கீதையைப் போல ஆன்மிக வாழ்க்கையில் மத்தியமப்பாதையைப் புத்தரும் கூறுகிறார். உடலைக் கடுமையாக வருத்துதல் போன்ற தீவிரச் சாதனங்களையும், அளவுக்கு மீறி உலகியல் இன்பங்களில் மூழ்கித் திளைப்பதையும் விட்டு மிதமான மத்தியமப் பாதையில் (நடுவழியில்) செல்ல வேண்டும் என்றார். வீணையின் கம்பியை அதிகமாக முறுக்கினாலும், அல்லது அதிகமாகத் தளர்த்தினாலும் இனிய நாதத்தை எழுப்ப முடியாது. அதே போல் உடலாகிய வீணையையும் அளவுக்கு மீறி வீணாக வருத்துவதாலும் மிதமிஞ்சிய இன்பத்தைக் கொடுப்பதாலும் நிர்வாணம் என்னும் பேரின்ப நிலையைப் பெற இயலாது என்பது அவரது துணிபு.

பௌத்த மதக் கொள்கைகள் பலவற்றைப் படிக்கும்போது அவை இந்து மதக் கொள்கைகள் போலவே இருப்பதைக் காணலாம். 'புத்தரின் போதனைகள் அனைத்தும் உபநிஷதங்களின் உன்னதமான கருத்துக்களையே ஆதாரமாகக் கொண்டவை' என்பதைத் தத்துவமேதை டாக்டர் ராதாகிருஷ்ணன் போன்ற அறிஞர்கள் தெளிவாக விளக்கியிருக்கிறார்கள். ஆதிசங்கரரைப் 'பிரச்சன்ன பௌத்தர்' (மறைமுகமான பௌத்தர்) என்று சிலர் சொல்வதுண்டு. புத்தரையும் பௌத்தர்களையும் 'பிரச்சன்ன (மறைமுகமான) வேதாந்திகள்' என்று தாராளமாகச் சொல்லலாம். அக்காலத்தில் வழக்கில் நிலவிய இந்துமதத் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு புத்தர் தமது தத்துவக் கருத்துக்களை வகுத்தார். பௌத்தம் கூறிய பல உண்மைகளை இந்துமதம் சுவீகரித்துக் கொண்டது. ஆதிசங்கரர் வைதிக இந்து மதத்திற்கு இணைந்ததாக பௌத்த மதக் கருத்துக்களைப் பொருத்தி வைத்தார். எனவே புத்தர் கண்ட தத்துவங்களைப் பயன்படுத்திப் பிற்காலத்தில் இந்து மதம் மேலும் மேலும் தன்னை வளப்படுத்திக் கொண்டது. சுருங்கக்கூறின் இந்து மதமும் பௌத்த மதமும் பரஸ்பரம் தத்துவங்களைக் கொடுத்தும் வாங்கியும் பொலிவு பெற்றுள்ளன.

பௌத்தக் கொள்கைகள் பல இந்துக்களுக்கு, குறிப்பாக அத்வைத வேதாந்திகளுக்கு உடன்பாடானவை. எனவே தம்மபதத்தைப் படிப்பது இந்து மதத்தை மேலும் தெளிவாகப் புரிந்து கொள்ளத் துணைபுரியும்.

மதப் பிரச்சாரம், மதமாற்றம், தொண்டு, ஒரு சங்கமாகக் கட்டுக்கோப்புடன் இருந்து உயிர் துடிப்புடன் செயற்படுவது ஆகியவற்றை மதத்துறையில் ஏற்படுத்தி எல்லா மதங்களுக்கும் முன்னோடியாக அமைந்தது புத்தமதமே ஆகும். அந்த வகையில் மதங்களில் மகிமை வாய்ந்த ஒரு மதம் என்று புத்தமதத்தைக் கூறலாம்.

கீழை நாட்டின் ஆன்மிக தீபத்தை உலக அரங்கில் முதன்முதலாக ஏற்றி வைத்தப் பெருமை பௌத்த மதத்திற்கே உரியது. 'மிஷனரி' அமைப்பான பௌத்தம் முதன் முதலில் இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்குச் சென்றது, இந்தியச் சிந்தனைகள் உலக நாடுகளில் பரவ ஒருவகையில் உதவியது எனலாம்.

பிறந்தார் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பேர் இன்பம்
பற்றின் வருவது முன்னது; பின்னது அற்றோர் உறுவது.

என்று மணிமேகலை கூறுகிறது.

உலகம் துன்பமயமானது என்பதுதான் கடைந்தெடுத்த உண்மை. இதை உணர்ந்தவர்களே தீரர்கள், விவேகிகள் என்று பௌத்தம் கூறுகிறது. உலகம் இன்பமயமானது என்று நினைப்பவர்கள் அவ்விவேகிகளே ஆவர். புத்தர் கண்ட அதே துன்பங்கள் இன்றும் நம்மைச் சூழ்ந்துள்ளன. அவற்றைக் களைய அவர் அருளிய அஷ்டாங்க மார்க்கமும் மணிமொழிகளும் அருமருந்தாவன.

ஒரு சாதகனிடம் இருக்க வேண்டிய விரல்விட்டு எண்ணக்கூடிய அபூர்வமான கீதை போன்ற சில நூல்களில் தம்மபதமும் ஒன்று என்று நிச்சயம் சொல்லலாம். இதைப் படிக்கும்போது கீதை, ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் உபதேசங்கள், திருக்குறள் ஆகியவற்றில் இடம் பெற்றுள்ள பல கருத்துக்கள் நினைவுக்கு வருகின்றன.

'எல்லாப் பாவங்களையும் நீக்குதல், நற்கருத்துக்களைக் கடைப்பிடித்தல், உள்ளத்தைத் தூய்மைப் படுத்தல் இதுதான் புத்தரின் உபதேசம்' என்று தம்மபதம் (183) விதித்திருக்கிறது. எல்லாப் பாவங்களிலிருந்து விலகுவது, பற்றற்ற மனப்பான்மை, ஒழுக்கம், தீவிர வைராக்கியம் ஆகியவற்றில் நாம் நிலைபெற, தம்மபதக் கருத்துக்கள் நம் உள்ளத்தில் ஆழ்ந்து பதியவேண்டும். *

# கீதை காட்டும் கடவுள்

சுவாமி தபஸ்யானந்தர்



பகவத்கீதையின் மிக முக்கியமான சிறப்புக்களில் ஒன்று, காண்பவரின் பார்வையை வேறு எங்கும் செல்ல முடியாமல் தடுக்கும் ஒளிப்பிழம்பு போன்று அது கடவுளின் இயல்பு பற்றித் தரும் அற்புதமான விளக்கங்களாகும். இந்த விளக்கங்கள் இதற்கு முன்னால் கடவுளைப்பற்றிச் சாஸ்திரங்களில் கூறப் பட்டுள்ள தெளிவில்லாத மனதிற்கு உற்சாகம் தராத விளக்கங்களிலிருந்து முற்றிலும் மாறு பட்டவை; புத்தம் புதியவை; படிக்கும்போது அளவில்லாத உற்சாகத்தையும், அடக்க முடியாத உள்ளக் கிளர்ச்சியையும் தருபவை. அந்த விளக்கங் களைக் காண்போம்.

### கீதையில் காட்டப்படும் பகவான்

எல்லா அண்டங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிற பேரண்டமாக இறைவன் விளங்கு கிறார். அவருடைய கைகளும் கால்களும் பூமி, ஆகாயம், சூரியன், சந்திரன் என்ற அண்டங்களில் உள்ள பொருள்களுள் ஒவ்வொன்றிலும்-ஒவ்வொன் றின் அணுவிலும் நீண்டு நிறைந்திருக்கின்றன.

அவருடைய தலையும் கண்களும் வாயும் எல்லாத் திசைகளிலும் பரவியிருக்கின்றன. அவ ருடைய காதுகள் எல்லாத் திசைகளிலும் நீட்டிக்கொண்டிருக்கின்றன. அவர் இந்தத் தலை, கண், காது, வாய், கை, கால்கள் முதலிய உறுப்புக் களின் மூலம் சிந்திப்பது, காண்பது, கேட்பது, உண்பது, நடப்பது, உணர்வது முதலிய காரியங் களைச் செய்பவராக விளங்குகிறார். அதே நேரத்தில் இந்தப் புலன் உணர்வுகளைக் கடந்தவராகவும் விளங்குகிறார்.

அவர் உலகத்தையும் உலக உயிர்களையும் உருவாக்கி, அவற்றை ஆட்டிப் படைக்கிற முக்குணங்களிலிருந்து விடுபட்டவராக விளங்கு கிறார். அதே நேரத்தில் அந்த முக்குணங்களின் விளைவுகளுக்குள் தம்மை மகிழ்ச்சியோடு கட்டுப் படுத்திக்கொண்டு அவற்றின் ஆட்டங்களுக்குத் தம்மை ஆட்படுத்திக் கொள்பவராகவும் விளங்கு கிறார்.

### இயக்கமாக—இயக்கமின்மையாக!

அவருக்கு இயக்கம் என்பது இல்லை. அதே நேரத்தில் அவர் சதா சர்வகாலமும் இயங்கிக் கொண்டே இருக்கிறார்.

அவர் எல்லாப் பொருள்களிலும் உள்நின்று அதன் உட்பொருளாக விளங்குகிறார். அதே நேரத்தில் எல்லாப் பொருள்களையும் கடந்து வெளிப் பொருளாகவும் விளங்குகிறார்.

அவர் கண்களால் பார்க்க முடியாதபடி அவ் வளவு நுட்பமாக இருக்கிறார். புலன்களால் நெருங்க முடியாதபடி அவ்வளவு தொலைவில் இருக்கிறார். அதே நேரத்தில் கண்களால் பார்க்கக் கூடியவ ராகவும் புலன்களால் நெருங்கக் கூடியவராகவும் அவ்வளவு அருகிலும் இருக்கிறார்.

அவரோ பிளவு படுத்த முடியாதவர். என்றாலும் அவரே மலையாகவும் மரமாகவும் கடலாகவும் நதியாகவும் மண்ணாகவும் மனிதனாகவும் விலங்கு புழு பூச்சிகளாகவும் பிளவுபட்டும் பிரிவுபட்டும் இருக்கிறார்.

### அவருடைய சின்னஞ்சிறு தூசுதான்!

அவர் எல்லாம் அறிந்திருக்கிற, எல்லாவற்றையும் அணைத்துக்கொண்டிருக்கிற அறிவாகவும், மகத் தான ஆற்றலாகவும் விளங்குகிறார். அவருடைய பெருமையின் ஒரு சின்னஞ்சிறு தூசுதான் இப்போது நாம் காண்கிற இந்த ஆச்சரியமான உலகமாகவும், சூரியன், சந்திரன் முதலான கோள்களாகவும் விளங்கிக்கொண்டிருக்கின்றன.

எல்லையே இல்லாத அவருடைய ஆற்றலி லிருந்துதான் இந்த உலகத்தில் உள்ள மகத்தான ஆற்றல் அனைத்தும் தங்களின் ஆற்றலைப் பெற்றுள்ளன. மகத்தான அழகுகள் தங்கள் மகத்தான அழகைப் பெற்றுள்ளன. மகத்தான வலிமைகள் தங்கள் மகத்தான வலிமைகளைப் பெற்றுள்ளன. அண்டங்கள் அனைத்திலும் உள்ள உயிருள்ள, உயிரில்லாத எல்லாப் பொருள்களுக்கும் அவர்தாம் அடிப்படையாக விளங்குகிறார்.

கால ஓட்டத்தின் முடிவில் எல்லா உயிர்களும் அவரிடத்தில் கரைந்து போகின்றன. மற்றொரு

படைப்புக் காலத்தின் துவக்கத்தில் மறுபடியும் அவரே தம்மிடமிருந்து, தம்மில் கரைந்துபோன எல்லா உயிர்களையும் வெளிப்படுத்துகிறார்.

**தள்ளிக்கொண்டே இருக்கிறார்!**

தம்முடைய சொந்த இயல்பான பிரகிருதியைக் (Lower Nature) கட்டுப்படுத்தி, தப்பிவிடாதபடி, முக்குணங்களால் கட்டப்பட்ட, எண்ணிக்கை இல்லாத மனிதர்களையும் மற்ற உயிர்களையும் அவர் மறுபடியும் மறுபடியும் படைத்து உலகை நோக்கித் தள்ளிக்கொண்டே இருக்கிறார்.

அவர் காலமாக இருக்கிறார். உலக உயிர்கள் அனைத்தையும் அழிக்கும் காலனாகவும் விளங்குகிறார்.

ஆற்றுநீர் பேரிரைச்சலோடு கடலை நோக்கி ஓடி அதனோடு கலந்து தன்னை (தன் தனித்தன்மையை) அழித்துக்கொள்வது போல், விட்டில் பூச்சிகள் வெறியோடும் வேகத்தோடும் விளக்கை நோக்கிப் பறந்து சென்று அதில் வீழ்ந்து தம் உயிரைப் போக்கிக்கொள்வது போல், இந்த உலகம் உறுதியாகவும், நிச்சயமாகவும் தன்னைச் சாக அடித்துக் கொள்ள அவரை நோக்கி ஓடிக்கொண்டிருக்கிறது.

உலகில் உள்ள ஒளிகளுக்கு எல்லாம் அவர் ஒளியாக விளங்குகிறார். இருளால் தொட முடியாதபடி அவ்வளவு உயர்வான இடத்தில் இருக்கிறார். சூரியனும் சந்திரனும் நெருப்பும் உமிழ்கிற அளவிட முடியாத ஒளி அவருடையதுதான்.

**இயக்கமும் இயக்குபவரும்.**

எல்லா உயிர்களிலும் உலகத்தை அறிகிற அறிவாக அவர் இருக்கிறார். எல்லா உயிர்களின் இதயங்களையும் அவற்றின் இதயபீடத்தில் அமர்ந்து இயக்குபவராகவும் இயக்கும் இயக்கமாகவும் அவர் விளங்குகிறார்.

அவரிடமிருந்துதான் தெய்விகத்தின் அடிப்படைப் பண்பான நினைவாற்றல் தோன்றுகிறது; ஞானம் தோன்றுகிறது. அவற்றின் மறதியும் அழிவுங்கூட அவரிடமிருந்துதான் தோன்றுகின்றன.

பகவானுக்குப் பிறப்பு இல்லை; இறப்பும் இல்லை; என்றாலும் எல்லா உயிர்களுக்கும் தலைவராகவும் தர்மத்தின் வடிவமாகவும் இருக்கும் அவர் எப்போதெல்லாம் உலகத்தில் தர்மம் அழிந்து அதர்மம் அதிகமாகிறதோ அப்போதெல்லாம் நல்லவர்களைக் காக்கவும், கொடியவர்களை அழிக்கவும், தருமத்தை நிலைநிறுத்தவும், தம்முடைய யாராலும் புரிந்துகொள்ள முடியாத மாயையின் மூலம் தம்மைப் பிறப்புக்கும் இறப்பிற்கும் ஆட்படுத்திக்கொண்டு மனிதவடிவில் பூமியில் அவதரிக்கிறார்.

யுகம் யுகமாக இவ்வாறு அவர் மனிதகுலத்தின் நன்மைக்காக அவதாரம் செய்துகொண்டே இருக்கிறார். அவருடைய அந்த அவதாரத் தோற்றத்தையும், அவருடைய சாதனைகளையும் அசைக்க முடியாத நம்பிக்கையாலும் பக்தியாலும் யார் உணர்ந்துகொள்கிறார்களோ, அவர்கள் தெய்விக ஞானத்தைப் பெற்று இந்த உலக மாயையிலிருந்து விடுதலை பெறுகிறார்கள்.

**அவரே தந்தை; அவரே குரு**

தம்முடைய இயல்பான மாயையின் மூலம், உலக உயிர்கள் அனைத்தையும் அவற்றின் துன்பத்திற்குக் காரணமான பந்தத்தில் அவர் அடைக்கிறார். எல்லாவற்றையும் அழிக்கிற காலமான அவர் தம் இயல்பான மாயையையும் அதன் பந்தத்தையும் அழித்து ஒழித்துவிடுகிறார். அப்படி அழித்து ஒழிக்கும் அவர் மனிதர்களின் பக்தி, கருணை என்னும் பந்தங்களால் கட்டப்பட்டு, மனிதர்களோடு எப்போதும் வாழ்ந்துகொண்டும் இருக்கிறார்.

இந்த உலகில் அசைகிற பொருள்கள் அனைத்துக்கும் அசைய முடியாத கல், மண், மலை முதலிய எல்லாப் பொருள்களுக்கும் அவரே தந்தையாக விளங்குகிறார்.

இந்த உலகத்தில் அசைகிற பொருள்கள் அனைத்துக்கும், அசையாத கல் மண் முதலிய எல்லாப் பொருள்களுக்கும் ஞானத்தைத் தருகிற மகத்தான குரு அவர்தாம்; அவை தொழுகிற கடவுளும் அவர்தாம்! அவருக்கு ஈடும் இல்லை, இணையும் இல்லை.

**தந்தையாக ; நண்பனாக**

ஆனால் அவரே, அடைக்கலம் என்று யார் தம்மை நாடி ஓடுகிறார்களோ அவர்களை, வேதனையால் துடிக்கும் அன்புள்ள மகனை அணைத்து ஆதரிக்கும் பாசம் மிகுந்த தந்தை போலவும், நட்பு மிகுந்த ஒரு நண்பனைத் துன்பத்திலிருந்து காக்கும் நேசம் மிகுந்த மற்றொரு நண்பனைப் போலவும், ஆசை மிகுந்த காதலியை வேதனையிலிருந்து காக்கும் அன்பு மிகுந்த காதலனைப் போலவும் காப்பாற்றுகிறார்.

அவர்தாம் இந்த அண்ட சராசரங்களின் தந்தை, தாய், பாட்டன், நண்பர் என்று எல்லாமுமாக இருந்து அடைக்கலம் தருபவர்.

எல்லா உயிர்களுமே அவருக்குச் சமமானவை தாம். ஒன்றிடம் வெறுப்பும், இன்னொன்றிடம் விருப்பமுமாகிய வேற்றுமை அவரிடம் இல்லை. ஆனால் யார் அவரை அளவுகடந்த பக்தியோடு வழிபடுகிறார்களோ அவர்களிடம் அவர் இருக்கிறார். அவர்களும் அவரிடம் இருக்கிறார்கள்.

இதுதான் கீதை கடவுளைப்பற்றித் தருகிற அற்புதமான விளக்கம். இத்தகைய தெளிவான, அறுதியிட்டுக் கூறுகிற விளக்கங்கள் கீதைக்கு முன் அமைந்த சமய நூல்களுள் எதிலும் இல்லை. ★

## உயர்ந்த உள்ளம்

ஒரு நாள் அதிகாலையில், கல்கத்தாவில் கார்ன்வாலிஸ் ஸ்கொயர் என்னும் இடத்தில் ஒரு பிராம்மணர் கங்கையில் நீராடி, வாட்டமான முகத்துடன், கண்களில் நீர்மல்க வந்து கொண்டிருந்ததை ஈசுவர சந்திர வித்தியாசாகரர் பார்த்தார். அவரை நிறுத்தி, அவர் வாட்டத்துக்கு காரணம் என்ன என்று விசாரித்தார். எத்தனையோ சீமான்களை உதவிக்கு அணுகி, ஒன்றுமே கிடைக்காமல் வெறுப்படைந்த பிராம்மணர், முரட்டுத்துணி உடுத்தியிருந்த வித்யாசாகரிடம் விவரத்தைக் கூற விரும்பவில்லை. வற்புறுத்திக் கேட்கவே, பிராம்மணர் தம் கதையைக் கூறினார்.



அவருடைய புதல்வியின் திருமணத்துக்கு அவர் கடன் வாங்கியதாகவும் இப்போது கடன் கொடுத்தவர்கள் நீதிமன்றத்தில் அவர்மீது வழக்குத் தொடர்ந்திருப்பதாகவும், அந்தத் தொகையை செலுத்த இயலாத வறுமை நிலையில் இருப்பதாகவும் கூறினார். அவருடைய பெயர், வழக்கு எண், வாய்தாத் தேதி, முதலிய பல விவரங்களையும் வித்தியாசாகரர் அறிந்தார். ஆனால் ஒன்றும் கூற வில்லை. தமக்கு உதவி கிடைக்காது என்ற, உறுதியுடன் ஏக்க முள்ள பிராம்மமணர் அவ்விடத்தை விட்டுச் சென்றார்.

வித்தியாசாகரர் நீதிமன்றத்துக்குத் தம் நண்பர் ஒருவரை அனுப்பி விவரம் அறிந்தார். பிராம்மணர் மீது 2,400 ரூபாய்க்கு வழக்குத் தொடர்ந்திருந்தனர். வித்யாசாகரர் அந்தப் பணத்தைப் பிராம்மணரின் சார்பாக நீதி மன்றத்தில் கட்ட ஏற்பாடு செய்திருந் தார். நீதிமன்ற ஊழியர்களிடம், 'இந்தத் தொகையை செலுத்தி யவர் யார் என்று எக்காலத்தும் சொல்லக்கூடாது' என்றும், உதவி பெற்ற பிராம்மணர் தம் நன்றியறிதலைத் தெரிவிக்க, பணம் கட்டி யவர் யார் என்பதைத் தெரிந்துகொள்ள நீதிமன்ற ஊழியர்களுக்குப் பணம் கொடுக்க முன்வருவார் என்றும், ஊழியர்கள் ரகசியத்தை வெளியிடுவதில்லை என்று உறுதி கூறினால், பிராம்மணர் கொடுக்க இருக்கும் நன்கொடையைத் தாமே தருவதாகவும் கூறி அவ்வாறே செய்தார்.

குறிப்பிட்ட நாளில், வழக்கு விசாரணைக்கு வந்தது. ஒரு புண்ணியவான் அந்தத் தொகையைக் கட்டிவிட்டார் என்பதை அறிந்த பிரரம்மணர், அந்தப் புண்ணியவானின் பெயரைத் தெரிவித்தால் நிறைய நன்கொடை தருவதாக ஊழியர்களிடம் கூறினார். எவ்வளவோ முயன்றும் அவரால் பணம் கட்டியவர் பெயரைத் தெரிந்துகொள்ள முடியவில்லை, கடைசியாக, பணம் கட்டி உதவிய புண்ணியவானை வாயார வாழ்த்திக் கொண்டு சென்றார்.

—ஏ. என். ராய்

நன்றி: பண்பு




# கண்ணன் அருள் புரிந்த முறை

நரேந்திரன்

ஒரு சமயம் கண்ணபிரான் கருடனை அழைத்து, யக்ஷராஜன் குபேரனின் ஏரியிலிருந்து மிகவும் வாசனையுடைய தாமரை (ஸௌகந்திக கமலம்) மலரைக் கொண்டு வருமாறு பணித்தார். அவ்வளவுதான், கருடனுக்குச் சிறிது சிறிதாகத் தலைக்கனம் ஏறத் தொடங்கியது. 'ஆகா! என்னைப் போன்ற பலசாலியும் வெகு வேகமாகச் செல்லக்கூடிய திறமையும் உடையவரை இந்த மூவுலகிலும் காணவே முடியாது!' என்று நினைத்துக் கொண்டே, தன் சிறகுகளை மிகவும் அகலமாக விரித்துக் கொண்டு படுவேகமாகப் புறப்பட்டது. அது செய்த சப்தம் காரணமாக நாலு திசைகளிலும் எதிரொலி கிளம்பியது. விரைவில் கந்தமாதன பர்வதத்தை அடைந்து மலரைக் கொய்யத் தொடங்கியது.

அதே இடத்தில்தான் அப்போது ஸ்ரீராமபக்த அநுமான் வசித்து வந்தார். ஆஞ்சனேயர், மிகுந்த அட்டகாசத்துடன் கருடன் மலர்களைக் கொய்வதைக் கண்டு துணுக்குற்றார். அவர் கருடனை நோக்கி, ''அப்பா, நீ யாருக்காக இந்த மலர்களை எடுத்துச் செல்கிறாய்? இந்த மலர்களுக்குச் சொந்தக்காரனாகிய குபேரனின் அநுமதியின்றி நீ ஏன் மலர்களை நாசம் செய்கிறாய்?'' என்று கேட்டார்.

கருடன் கர்வத்துடன், ''நான் பகவான் கண்ணபிரானுக்காக இந்த மலர்களை எடுத்துச் செல்கிறேன். கண்ணனுக்காகச் செய்யும் இந்தப் பணிக்கு எவருடைய அனுமதியும் தேவையில்லை'' என்று கூறினான்.

இந்தப் பதிலைக் கேட்டு கோபமடைந்த அநுமன், கருடனைப் பிடித்துத் தம்முடைய கக்கத்தில் வைத்துக் கொண்டு துவாரகையை அடைந்தார். அநுமன் செய்த வீர முழக்கத்தால் அண்டமே அதிர்ந்தது. துவாரகை மக்கள் பீதியுற்றனர். அநுமனின் இந்த வேகமான பாய்ச்சலைத் தடுக்கச் சுதர்சன சக்கரம் முன்வந்தது. அவ்வளவுதான், அநுமன் அந்தச் சுதர்சன சக்கரத்தையும் எடுத்து, மற்றோர் அக்குளில் வைத்துக் கொண்டார்.

இந்த விளையாட்டுகளையெல்லாம் மாயக் கண்ணன் பார்த்துக் கொண்டுதான் இருந்தார். அவர்தானே இந்த நாடகத்தின் சூத்திரதாரி!

மாயவர் தம் அருகில் இருந்த ராணிகளிடம் அநுமனைச் சுட்டிக்காட்டி, ''இதோ பாருங்கள்! அநுமன் மிகவும் கோபத்துடன் வந்துகொண்டிருக்கிறான். தற்சமயம் அநுமனின் எதிரில் சீதையுடன் இராமபிரான் வந்தால்தான் நல்லது. இல்லாவிட்டால் அநுமன் தனக்குள்ள கோபத்தினால் துவாரகையையே சமுத்திரத்தில் தூக்கி எறிந்து

விடுவான். எனவே உங்களுக்குள் யாராவது ஒருவர் சீதையைப் போல வேடமணிந்து கொண்டு வாருங்கள். நான் ராமர் வேடம் அணிகிறேன்'' என்றார்.

இவ்விதம் சொல்லிக் கொண்டே கண்ணபிரான் ஸ்ரீராமபிரானைப் போன்ற வடிவத்துடன் அங்கேயே அமர்ந்து விட்டார். ஆனால் அவருடைய ராணிகள் அனைவரும் சீதையைப் போல வேடம் அணிய எவ்வளவுதான் முயற்சி செய்தும் அவர்களால் அது இயலவில்லை.

முடிவில் ராணிகள் அனைவரும் கலந்து பேசி ராதையை அழைத்து வந்தனர். ராதையும் சீதை போல மாறி விட்டாள். கண்ணபிரானின் மற்ற மனைவியர் செய்ய முடியாத காரியத்தை மிகவும் எளிதில் ராதை செய்து விட்டாள். ராதை சீதையாகி, ராமன் வேடம் தாங்கிய கண்ணபிரானின் அருகே வந்து அமர்ந்து கொண்டாள்.

அனுமனும் அங்கே வந்து சேர்ந்தார். எதிரே தாம் வணங்கும் ராமனையும் பிராட்டியையும் கண்டு பேருவகையுடன் அவர்களின் திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்.

அந்தச் சமயத்திலுங்கூட அனுமன் தம் இரு அக்குள்களிலும், கருடனையும் சுதர்சன சக்கரத்தையும் எச்சரிக்கையோடு ஜாக்கிரதையாக வைத்திருந்தார்.

ராமர் வேடத்திலிருந்த கண்ணன் அனுமனை ஆசீர்வதித்துக் கொண்டே, ''குழந்தாய்! உன் அக்குள்களில் ஏதோ காணப்படுகிறதே! அது என்ன?'' என்று கேட்டார்.

அனுமன் பணிவுடன், ''சுவாமி! அது வேறொன்றுமில்லை. நான் மனித சஞ்சார மற்ற இடத்தில் ராமஜபம் செய்துகொண்டிருந்தேன். அப்போது ஓர் அற்பப் பறவை இடைஞ்சல் செய்யவே அதை நான் பிடித்து வைத்திருக்கிறேன். மற்றொன்று சகடை (சக்கரம்) போன்ற ஒரு விளையாட்டு சாமான் நான் வரும் வழியில் அது என்மீது மோதி இடர்ப்படுத்தியதனால் அதையும் பிடித்து வைத்திருக்கிறேன். சுவாமி! தங்களுக்கு மலர்கள் வேண்டுமென்றால் என்னிடம் சொல்லக்கூடாதா? பாவம்! அந்தப் பறவை, மகா பலிஷ்டனும் சிவபக்தனுமாகிய யக்ஷனின் ஏரியிலிருந்து மலரைக் கொண்டு வரக்கூடிய அவ்வளவு திறமை பெற்றதா என்ன?'' என்றார்.

பகவான், ''குழந்தாய், பாவம்! அவர்களை விட்டுவிடு. நான் உன் செய்கையால் மிகவும் மகிழ்கிறேன். நீ இப்போது போகலாம்! உன் ஏகாந்த இடத்திற்குச் சென்று பஜனையைத் தொடரலாம்'' என்றார்.

ராமரின் கட்டளையைச் சிரமேற்கொண்டு அனுமன் கருடனையும் சுதர்சன சக்கரத்தையும் விடுவித்தார். பின்னர் மீண்டும் அவர் ராமபிரானை வணங்கிவிட்டு ''ஜய ராம், சீதாராம்'' என்று சொல்லிக்கொண்டே கந்தபாதன பர்வதம் நோக்கிச் சென்றார்.

இங்கே தன் வேகத்திற்காகக் கருடனும், திறமைக்காகச் சுதர்சன சக்கரமும், அழகினால் கண்ணனின் மனைவிமார்களும் கர்வம் கொண்டிருந்தனர். பகவான் கண்ணன் இந்த மூவரின் கர்வத்தையும் ஒரே சமயத்தில் தகர்த்தெறிந்தார்.



# அருட்செல்வர் பூந்தானம்

ஆர். சக்திதரன்

ஒருவர் சிறந்த பக்தராக இருந்துவிட்டால், பகவான் அவரிடம் எப்படியெல்லாம் அன்பு பாராட்டுகிருர் என்பதற்கு, பூந்தானத்தின் வாழ்க்கை நல்ல ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

1

கேரள மாநிலத்தில் பூந்தானம் என்ற நம்பூதிரி ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்குக் குழந்தைப் பாக்கியம் இல்லாமல் இருந்தது. பல ஆண்டுகளுக்குப் பிறகு குருவாயூரப்பனின் திருவருளால் குழந்தை ஒன்று பிறந்தது.

தமது குழந்தையின் அன்னப்பிராசன விழாவைப் பூந்தானம் மிகவும் சிறப்பாகக் கொண்டாட நினைத்தார். அதற்காக ஒரு நாளைக் குறிப்பிட்டுப் பல ஊர்களிலிருந்து நம்பூதிரிகளை வரவழைத்தார். ஹோமம் நடைபெறுவதற்கு முன்பு எல்லா நம்பூதிரிகளும் தங்கள் மேலாடைகளைப் பூந்தானத்தின் வீட்டிலிருந்த ஒரு மூலையில் போட்டுவிட்டுக் குளிக்கச் சென்ருர்கள். குளித்து வந்தவுடன் ஹோமம் ஆரம்பமாயிற்று. பிறகு பால் கலந்த சாதத்தைக் குழந்தைக்கு ஊட்ட நினைத்துக் குழந்தையைக் கொண்டுவரச் சொன்னுர்கள். அப்போதுதான் வீட்டில் உள்ளவர்களுக்குக் குழந்தையைப் பற்றிய நினைவு வந்தது. வீடு முழுவதும் தேடிப் பார்த்தார்கள். குழந்தையைக் காணவில்லை.

ஒரே கலவரம். குழந்தை நடந்து வெளியேயும் ஓடி இருக்காதே! திடீரென்று செவிலித்தாய்க்கு, தான் குழந்தையைக் குளிக்க வைத்ததும், சந்தடி இல்லாமல் அது தூங்க வேண்டும் என்பதற்காக ஹாலின் மூலையில் இருட்டில் படுக்க வைத்ததும் நினைவுக்கு வந்தன. ஓடிப்போய்ப் பார்த்தாள். அங்கே நம்பூதிரிகள் குளிப்பதற்கு முன்பு போட்டு விட்டுச் சென்ற துணிகள் குவிந்து கிடந்தன. துணிகளை விலக்கிப் பார்த்தபோது குழந்தை இறந்து போயிருந்தது! தூக்கத்தில் குழந்தை புரண்டு படுத்துத் துணிகளை முகத்தில் மூடிக்கொண்டதனுல் மூச்சுத் திணறி இறந்திருப்பது தெரிய வந்தது.

குழந்தையின் நிலையைக் கண்ட தாய் கதறித் துடித்தாள். பூந்தானம் குழந்தையை வாங்கி மடியில் வைத்துக்கொண்டு புலம்பினுர். அதே சமயம் அவருடைய உள்ளத்தில் ஒரு வேகம் பிறந்தது. தாமே குழந்தையைத் தூக்கிச் சென்று சுடுகாட்டில் புதைத்தார். குருவாயூர்க் கண்ணனையும் இறந்த தமது குழந்தையையும் நினைத்து அவர் அழுதழுது புலம்பினுர். அந்தப் புலம்பலே இப்போது 'ஞானப் பான' (ஞானப் பாட்டு) என்ற புகழ் பெற்ற மலையாளக் கவிதைத் தொகுப்பாக விளங்கி வருகிறது.

2

பூந்தானம் சிறந்த கல்விமான் அல்ல. பக்தி, பஜனை ஆகியவற்றை அவர் முறைப்படி செய்ததுமில்லை. அவருக்குத் தெரிந்த ஒன்று, குருவாயூர்க் கண்ணனை முழுமனதுடன் நினைத்து அன்பு கலந்த பக்தியைச் செலுத்துவதுதான்.

பூந்தானம் தமது 'ஞானப்பான' பாடல்களைப் புத்தக வடிவமாக்க நினைத்தார். அதனைத் திருத்தி நூல்வடிவில் அமைத்துத் தரக்கூடிய ஒரு கல்விமானின் உதவி அவருக்குத் தேவையாக இருந்தது. இந்த நிலையில் ஒரு நாள் அவர் கோவிலுக்குச் சென்ருர். அப்போது ஸ்ரீநாராயணீயம் இயற்றிய ஸ்ரீநாராயண பட்டதிரி மெதுவாகச் சுலோகங்களைச் சொல்லிக்கொண்டே கோவிலை வலம் வந்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் பூந்தானத்திற்குத் தமது 'ஞானப்பான' புத்தக வடிவம் நினைவுக்கு வந்தது.

வெட்கமும் தயக்கமும் பின்பக்கம் இழுக்க, ஆர்வமும் ஆவலும் முன்பக்கம் தூண்ட, தமது 'ஞானம

பான' ஏடுகளை எடுத்துக்கொண்டு பூந்தானம் நாராயண பட்டதிரியின் பின்னால் மெதுவாகச் சென்றார்.

கோவிலை வலம் வந்துவிட்டுத் திரும்பிய பட்டதிரி, தமக்குப் பின்னால் நின்ற பூந்தானத்தைப் பார்த்துக் குறும்புடன், "என்ன பூந்தானம்? என்ன விஷயம்?" என்று கேட்டார். பூந்தானம் உடனே, "ஞானப்பான என்ற இந்தச் சிறிய நூலை அடியேன் இயற்றியிருக்கிறேன். தாங்கள் இதைப் படித்துத் தவறுகளைத் திருத்தித் தருவீர்களானால் நான் மிகவும் பாக்கியசாலி ஆவேன். தங்களைத் தவிர வேறு ஒருவரிடமும் இதைக் கொடுக்க எனக்கு விருப்ப மில்லை" என்று பணிவுடன் கூறினார்.

தமக்கு முன்னால் கைகூப்பி நின்ற பூந்தானத்தின் தோற்றமும் பேச்சும் பட்டதிரிக்கு வேடிக்கையாக இருந்தன. கர்வத்துடன் அவர் முகத்தைச் சுளித்துக்கொண்டே, "ஓ! அந்த நாடோடிப் பாடல்களைச் சொல்கிறீர்களா? யாரோ இரண்டொரு பிச்சைக்காரர்கள் அதை முணு முணுத்துக் கொண்டிருந்ததைக் கேட்டிருக் கிறேன். ஒன்றுக்கும் உதவாத அதை நான் எப்படிப் படித்துத் திருத்த முடியும்? பொன்னான நேரத்தை வீணாக்கி அதைப் படித்துத் திருத்திக் கொண்டிருக்க என்னால் முடியாது. நீங்கள் வேறு யாரையாவது பாருங்கள்" என்று சொல்லிக் கொண்டே வேகமாகச் சென்றுவிட்டார்.

பூந்தானத்திற்கு உள்ளமே உடைந்துபோய் விட்டது. துக்கம் தொண்டையை அடைத்தது. கண்ணீர் தாரைதாரையாகப் பெருக, "கிருஷ்ணா!" என்று சொல்லி அழுதுகொண்டே வீடு திரும்பினார். "கிருஷ்ணா! என்னை இப்படி விட்டுவிட்டாயே! உனக்குக் கொஞ்சமாவது என் மீது இரக்கம் இருந்திருந்தால் இப்படிப்பட்ட ஒரு நிலை எனக்கு வந்திருக்குமா? அபத்தமான இந்தப் பாடலை எழுதும்படி என்னை ஏன் நீ தூண்டினாய்? ஒரு மகா புருஷர் கேவலமாகப் பேசும் நிலைக்கு என்னை இப்போது ஆளாக்கிவிட்டாயே!" என்று, மாலைச் சந்தியாவந்தனம் செய்வதற்கு கூட எழுந்து போகா மல் தரையில் படுத்துப் புலம்பிக்கொண்டேயிருந்தார்.

## 3

பூந்தானத்தின் கோரிக்கையை நிராகரித்த நாராயணபட்டதிரி கோவிலிலிருந்து வீடு திரும்பினார். அன்று மாலை தமது அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டு பூஜையறைக்குள் நுழைந்தார். அவர் ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் ஸ்ரீநாரா யணீயத்தைப் பாராயணம் செய்துவிட்டுப் பிறகு அந்தப் பூஜையறையிலே ஸ்ரீகுருவாயூரப்பனை நினைத்துத் தியானம் செய்வது வழக்கம். அன்றும் வழக்கம் போல் பட்டதிரி ராகத்துடன் சுலோகங் களைப் பாராயணம் செய்வதற்கு உட்கார்ந்தார். இருள் சூழ ஆரம்பித்திருந்த அந்தச் சமயத்தில் யாரோ வீட்டின் கதவைத் தட்டும் சப்தம் கேட்டது.

இந்த நேரத்தில் இங்கே வருபவர் யாராக இருக்கக் கூடும் என்று நினைத்தபடியே எழுந்து சென்று கதவைத் திறந்தார். எதிரில் வித்யாதேஜஸ் ஜொலிக் கும் ஒரு பாலப்பிரம்மசாரி நின்றுகொண்டிருந்தார். கௌபீனதாரி, யஜ்ஞோபவீதம், கிருஷ்ணாஜினம், தண்டம், ஜபமாலை, கமண்டலம், குடை முதலிய அலங்காரங்களுடன் வாமன மூர்த்தி போலக் காணப்பட்ட அந்தப் பிரம்மசாரியைக் கண்டதும் பட்டதிரிக்குப் பரம சந்தோஷம் உண்டாயிற்று. தம்மை ஆட்கொண்டருளிய குருவாயூரப்பனின் பெருமையைப் பாலப்பிரம்மசாரிக்கும் எடுத்துச் சொல்லி, அவரோடு பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் காரணமாகவே புதையலைக் கண்ட மகிழ்ச்சியில் திளைத்தார். தம்முடைய தம்பி போல் காணப்பட்ட வித்யாதேஜஸ் ஜொலிக்கும் பிரம்ம சாரியை முறைப்படி பட்டதிரி வரவேற்று உபசரித்து ஆசனத்தில் அமரும்படி கேட்டுக்கொண்டார்.

பின்பு அந்தப் பிரம்மசாரியிடம் பட்டதிரி, "தேவரீர் சரியான நேரத்தில்தான் இங்கே எழுந் தருளியிருக்கிறீர்கள். நான் இயற்றிய நாராயணீயம் என்ற கிரந்தத்தைப்பற்றித் தாங்கள் ஏற்கனவே கேள்விப்பட்டிருப்பீர்கள் என்று நம்புகிறேன். அதை இப்போது பாராயணம் செய்வதாக இருக் கிறேன். தாங்கள் அதனைச் சற்றுச் செவிமடுத்துத் தங்களின் மேலான கருத்தைத் தெரிவிப்பீர் களானால் அது எனக்கு மிகவும் பெருமை தருவ தாக இருக்கும்" என்று பக்தியும் அன்பும் இழைந்த குரலில் கேட்டுக்கொண்டார்.

உடனே இளம் பிரம்மசாரி புன்முறுவலுடன், "ஆமாம், பட்டதிரி. கோவிலில் பூந்தானம் தங்கள் நாராயணீயத்தைப் பற்றித்தான் கூறினார். அதைக் கேட்கும் ஆவலால்தான் நான் இங்கே வந்தேன்" என்று தெரிவித்தார்.

'அந்த அசட்டுப் பூந்தானம் என்ன என் நாராயணீ யத்தைப்பற்றிச் சொல்வது?' என்ற நினைப்புடன் "சரி, படிக்கிறேன், கேளுங்கள்" என்று சொல்லி

விட்டுப் பக்தியில் முழுவதும் தோய்ந்தவராக மிகவும் இனிமையான குரலில் முதற்பாடலைப் பாடி முடித்தார்.

பிறகு, "என் பாடல் எப்படி இருக்கிறது?" என்று பிரம்மசாரியிடம் கேட்டார்.

உடனே பிரம்மசாரி, "ஆகா! மிகமிக அற்புதமாக இருக்கிறது. கல்விக்கடலில் மூழ்கி எடுத்த முத்துப் போல அல்லவா பாடியிருக்கிறீர்கள்! என்றாலும் அந்தப் பாடலின் மூன்றாவது அடியில் இலக்கணப்பிழை இருப்பதனால் அபத்தமாக இருக்கிறது" என்றார்.

பிறகு அபத்தம் என்ன என்பதையும் பட்டத்திரிக்குப் பிரம்மசாரி விளக்கினார். தவறு சுட்டிக் காட்டப்பட்டதும், 'இவ்வளவு படித்திருந்தும் இந்தத் தவறு எனக்கு எப்படித் தெரியாமற் போயிற்று!' என்ற நினைப்புடன் பட்டதிரி வெட்கத்தால் தலை குனிந்தார். இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, "சரி, அடுத்த சுலோகத்தைப் படிக்கிறேன்; கேளுங்கள்" என்று சொல்லிவிட்டு, ராகத்துடன் பாடி முடித்தார். பாலப்பிரம்மசாரி அந்தச் சுலோகத்திலும் இலக்கணப் பிழை இருப்பதை எடுத்துக் காட்டினார். பட்டதிரிக்கு மிகவும் சங்கடமாகிவிட்டது. மேற்கொண்டு சுலோகங்களைப் படிக்கப் படிக்க, ஒவ்வொரு சுலோகத்திலும் பிரம்மசாரி அதிக அளவில் பிழைகள் மலிந்திருப்பதை எடுத்துக்காட்டினார்.

இவ்விதம் பத்து சுலோகங்களைப் படித்த பட்டதிரி, பிழைகள் அதிகரித்துக் கொண்டே போவதைப்பற்றி மிகவும் இடிந்து போனார். சுலோகம் படிப்பதை நிறுத்திவிட்டுக் கோபத்துடன் அவர், "நீ யார்? உலகமே என் கவிதையைப் பாராட்டுகிறது; சாட்சாத் பகவானாகிய குருவாயூரப்பனே என் கவிதையைத் தலையாட்டி ரசித்து ஏற்றுக்கொண்டிருக்கிறான். அப்படிப்பட்ட என் கவிதையில் குற்றம் கண்டுபிடிக்க நீ யார்? உனக்கு என்ன தைரியம் இருக்க வேண்டும்?" என்று கடுகடுப்புடன் கேட்டுக்கொண்டே பிரம்மசாரியின் முகத்தை உற்று நோக்கினார்.

அப்போது ஓர் ஆச்சரியம் நடந்தது. மகர குண்டலங்களும், மயிற்பீலியும், கொண்டையும், பீதாம்பரமும், வனமாலையுமாகக் குருவாயூரப்பன் புன்முறுவலுடன் தமக்கு எதிரில் நிற்பதைப் பட்டதிரி கண்டார். பாலப்பிரம்மசாரியின் வடிவில் வந்து தம்மிடம் இவ்வளவு நேரமும் உரையாடிக் கொண்டிருந்த குருவாயூரப்பனின் திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழ்ந்து பரவசத்துடன் புலம்பினார். கண்ணன் குனிந்து பட்டதிரியை வாரி எடுத்து அணைத்துக்கொண்டான். "பட்டதிரி! என்மீது நீ கொண்டுள்ள அன்பு எப்படிப்பட்டது என்று எனக்குத் தெரியாதா? என்றாலும் தாஸ கைங்கரியத்தை மறந்து வித்யாகர்வம் உன்னிடம் தலை தூக்கியதனால், அதைத் தடுக்கவே நான் இப்போது வந்தேன். நான் பக்திவலையில் அகப்படுகிறவன் என்பது உனக்குத் தெரியாதா? நீ எனக்கு எவ்வளவு பிரியமானவனோ அது போலவேதான் பூந்தானமும் எனக்குப் பிரியமானவன். அப்படியிருக்க 'நான்' என்னும் வித்யாகர்வத்துடன், பரம பக்தனாகிய பூந்தானத்தின் மனதை நீ புண்படுத்தியது சரியா? அவனுக்கு உன்னால் ஏற்பட்ட துக்கத்தை என்னால் சகிக்க முடியவில்லை. பணிவுடன் கூடிய பூந்தானத்தின் பக்தியையும் வித்யா கர்வத்துடன் கூடிய உன் பக்தியையும் என் மனத் தராசில் நிறுத்திப் பார்த்தபோது, பூந்தானத்தின் பக்திதான் உயர்ந்திருக்கக் கண்டேன். நீ உடனே விரைந்து சென்று பூந்தானத்தைச் சமாதானப் படுத்தி மன்னிப்புக் கேட்க வேண்டும். அப்படிச் செய்தால் நான் பெரிதும் மகிழ்ச்சி அடைவேன். அத்துடன் நாராயணீயத்தில் நான் எடுத்துக் காட்டிய எல்லாப் பிழைகளும் தாமே மறைந்து போய்விடும்" என்று கூறிக் கருணைக் கடலாகிய குருவாயூரப்பன் மறைந்துவிட்டான்.

## 4

கண்ணனின் தரிசனத்தால் பட்டதிரியின் மனம் தெய்விகப் பரவசத்தில் திளைத்தது. தமது வித்யா கர்வத்தினால் பூந்தானத்தை அவமானப்படுத்தியதை நினைத்தபோது தம்மீதே அவருக்கு வெறுப்புத் தோன்றியது. தமது செயலை நினைந்து வருந்தியவராகப் பகவானிடம் தம்மை மன்னிக்கும்படி பிரார்த்தித்துக்கொண்டே பூந்தானத்தின் இருப்பிடம் நோக்கி ஓடினார்.

அப்போது பூந்தானம் தமது இருப்பிடத்தில் இல்லை. அவரைத் தேடிச் சென்ற பட்டதிரி, கோவிலில் பூந்தானம் பகவான் சந்நிதியில் சாஷ்டாங்கமாக விழ்ந்து புலம்பிக்கொண்டிருந்ததைக் கண்டார். உணர்ச்சி வசப்பட்டவராகப் பட்டதிரி ஓடோடிச் சென்று, பூந்தானத்தை வாரி அணைத்துக் கொண்டு புலம்பினார்: "பூந்தானம்! என் பாவச் செயலை மன்னித்துவிடுங்கள். வித்யாகர்வத்தினால் தங்களை அலட்சியப்படுத்திவிட்டேன்" என்று

புலம்பியபடியே, பட்டதிரி நடந்த எல்லா விவரங்களையும் பூந்தானத்திடம் தெரிவித்தார்.

பூந்தானத்தின் உள்ளம் நெகிழ்ந்தது. "குருவாயூரப்பா! இந்த மூடனையும் ஒரு பொருட்டாகக் கருதி எனக்காகத் தூது சென்றாயே!" என்று சொல்லிக் கண்ணீர் மல்க இறைவனின் லீலையை நினைத்து வியந்தார்.

பட்டதிரி உள்ளம் கரைந்தவராக, "அன்பரே! தங்கள் பக்தியால் அல்லவா எனக்கு இன்று எம் பெருமானின் தரிசனம் கிடைத்தது? அதற்கு இணையாகத் தங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? நமது நட்பின் அடையாளமாக இந்த மோதிரத்தைத் தங்களுக்குத் தர விரும்புகிறேன். இதைத் தாங்கள் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். தயவுசெய்து மறுக்க வேண்டாம்" என்று சொல்லிக்கொண்டே, தமது விரலிலிருந்த மோதிரத்தைக் கழற்றிப் பூந்தானத்தின் விரலில் அணிவித்தார். மேலும், "இந்த மோதிரம் நமது நட்பின் சின்னமாகத் தங்களிடமே இருக்கட்டும். ஸ்ரீகுருவாயூரப்பனே வந்து கேட்டால் அல்லாமல் கழற்ற வேண்டாம்" என்றும் கேட்டுக்கொண்டார். நீண்ட நேரம் பகவானைப்பற்றிப் பேசி மகிழ்ந்த நிலையில் பட்டதிரியும் பூந்தானமும் பிரியாவிடை பெற்றுத் தத்தம் இருப்பிடம் திரும்பினர். ☆

## வித்யாசாகரரும் புத்தககங்களும்



வித்யாசாகரரின் சொந்த நூல்நிலையத்தில் பல அரிய நூல்கள் இருந்தன. புத்தகங்களை எல்லாம் சிறந்த முறையில் பைண்டு செய்து கவனத்துடன் அடுக்கி வைத்திருந்தார். அவருடைய நண்பர்கள் யார் வேண்டுமானாலும் புத்தகங்களை வீட்டுக்கு எடுத்துச் சென்று படிக்கலாம். சிலர் திருப்பி தருவதே இல்லை; சிலர் 'எடுத்துச் செல்லவே இல்லை' என்று வெட்கமில்லாமல் பொய் சொல்லுவார்கள்.

ஒரு முறை மிகவும் அரிய சம்ஸ்கிருதப் புத்தகம் காணவில்லை. அதை ஒரு புத்தகக் கடையில் விற்பனைக்காக வைத்திருந்ததை வித்யாசாகரர் பார்த்தார். புத்தகக் கடைக்காரர், அதைத் தமக்கு விற்றவர் பெயரையும் கூறினார். வித்யாசாகரரின் மிக நெருங்கிய நண்பரில் ஒருவர் அந்தப் புத்தகத்தை எடுத்து சென்று திருப்பிக் கொடுக்கவில்லை என்று தெரிந்தது.

புத்தகக் கடைக்காரர் கேட்டவிலையைக் கொடுத்து வித்யாசாகரர் புத்தகத்தை வாங்கினார். அது முதல் புத்தக விஷயத்தில் ஒருவரையும் நம்புவதில்லை.

ஒரு சிநேகிதர் சரித்திர சம்பந்தமான நூல்களின் தொகுப்பைப் படிக்க வேண்டும் என்றும், அதனை இரவல் கொடுக்கும்மடியும் விடாமல் தொந்தரவு செய்தார். வித்யாசாகரர் அந்தப் புத்தகத்தின் புதிய பிரதி ஒன்றை வாங்கி நண்பருக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார்.

புத்தகத்தின் அருமை தெரியாத நகரத்துப் பணக்காரர் ஒருவர் வித்யாசாகரரைப் பார்க்க வந்தார். அவருடைய நூல் நிலையத்திலுள்ள புத்தகங்களைப் பார்த்து, "ஐயா, ஏன் இவ்வளவு தொகை செலவுசெய்து புத்தகங்களை மொரோக்கோ பைண்டு செய்கிறீர்கள்? உங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதென்று கருதுகிறேன்" என்றார்.

வித்யாசாகரர் ஒன்றுமே பதில் சொல்லாமல் புன்சிரிப்புடன் மற்றப் பல விஷயங்களைப் பேசினார். சிறிது நேரம் கழித்து, பணக்காரரின் சால்வையை வியந்து, அதன் விலை என்ன என்று கேட்டார்.

உடனே பணக்காரர், "இது சாதாரணமான சால்வையன்று. அசல் பனாரஸ் சால்வை. விலை ஐந்நூறு ரூபாய்" என்றார்.

"ஏன் இவ்வளவு பணம் செலவு செய்து இந்தச் சால்வையை வாங்க வேண்டும்? குளிருக்குச் சாதாரணக் கம்பளி போதாதா? கடிகாரத்திற்குத் தங்க சங்கிலி ஏன்? நல்ல கயிறு ஒன்று போதாதா?" என்று கேட்டார் வித்யாசாகரர்.

பணக்காரருக்கு அப்போதுதான் விவரம் புரிந்தது. அவர் எழுந்து வணங்கி மௌனமாகச் சென்று விட்டார்.

—ஏ. என். ராய்

நன்றி: பண்பு



# புரி க்ஷேத்திரம்

19-2-79ஆம் நாள் காலையில் புவனேசுவரம் மடத்திலிருந்து நான் புரி ஜகந்நாதம் செல்ல ஏற்பாடாகியிருந்தது. புரி ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் கிளையிலிருந்து பிரம்மசாரி கார்த்திக் ஏதோ வேலையாக மூன்று நாட்கள் அப்போது புவனேசுவரம் வந்து தங்கியிருந்தார்.

19-2-79 காலையில் 8-30 மணிக்கு புவனேசுவரம் மடத்திலிருந்து பிரம்மசாரி கார்த்திக் உடன் வந்து என்னை புரிக்கு பஸ் ஏற்றினார். 9 மணிக்கு புவனேசுவரத்திலிருந்து புறப்பட்ட பஸ் 10-15க்கு புரி பஸ் நிலையத்தை அடைந்தது.

பிரயாணிகள் பஸ்ஸிலிருந்து இறங்கும்போதே சைக்கிள் ரிக்ஷாக்காரர்கள் சூழ்ந்து கொண்டார்கள். புவனேசுவரம், புரி ஆகிய இரண்டு இடங்களிலும் உள்ள சைக்கிள் ரிக்ஷாக்காரர்களில் பெரும்பாலோர் தெலுங்கு மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். ஆகவே சுலபமாக ஒரு ரிக்ஷாவை ஏற்பாடு செய்துகொண்டு புரியிலுள்ள மிஷனின் கிளைக்குப் புறப்பட்டேன்.

ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் மாணவரில்லத்தை அடைந்தபோது மணி 10-40 ஆகியிருந்தது. மாடியில் அமைந்துள்ள பிரார்த்தனைக் கூடத்தில் ஸ்ரீகுருதேவரை நமஸ்கரித்து விட்டுக் கீழே வந்தபோது, அங்கு மிஷனின் செகரட்டரியாக உள்ள சுவாமி தத்வத்ஸ்தானந்தர் என்னை அன்புடன் வரவேற்றார். அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது சென்னை மடத்திலுள்ள சாதுக்கள், பிரம்மசாரிகள் ஆகியோரின் நலனை அவர் ஆழ்ந்த அன்புடனும் அக்கறையுடனும் விசாரித்தார். எனது கடிதம் கிடைத்ததாகவும் அதன்படி 23-2-79 இரவு புரி ஜகந்நாத் எக்ஸ்பிரஸில் எனக்கு டிக்கட் ரிசர்வ் செய்யப்பட்டிருப்பதாகவும் தெரிவித்தார்.

எனக்காக ஒதுக்கப்பட்டிருந்த அறையில் பிரம்மசாரி ஞானேந்திரா பிஸ்கட், கேக், டீ ஆகியவற்றைக் கொண்டு வந்து கொடுத்து, "நீங்கள் முன்பு வந்தபோது இங்கே பேக்கரி இல்லை. இப்போது இங்கேயே பிஸ்கட், கேக், ரொட்டி ஆகியவற்றைத் தயாரிக்கிறோம். நமது மாணவர்களுக்கு இது பெரிதும் வசதியாக இருக்கிறது" என்றார்.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு நான் பார்த்ததை விடப் புரி மிஷனின் கட்டிடங்கள், நூல் நிலையம், காய்கறித் தோட்டம், பூந்தோட்டம் ஆகியவற்றில் எவ்வளவோ முன்னேற்றங்கள் ஏற்பட்டிருப்பதைக் கவனித்தேன். எனது அறைக்கு அடுத்துள்ள அறையில் கல்கத்தாவிலிருந்து வந்த என்ஜினியர் ஒருவர் தங்கியிருந்தார். அவரது மேற்பார்வையில் மாணவர்களுக்காக மேலும் சில அறைகள் கட்டும் வேலை நடந்துகொண்டிருந்தது.

அன்று 12 மணிக்குப் பகல் உணவின்போது, மாலை நான்கு மணிக்குச் சிற்றுண்டி அருந்திய பிறகு ஜகந்நாத ஆலய தரிசனத்திற்கு அன்பர் ஒருவரின் துணையுடன் என்னை அனுப்பி வைப்பதாக சுவாமி தத்வத்ஸ்தானந்தர் தெரிவித்தார். அவரிடம், மறு நாள் டூரிஸ்ட் பஸ்ஸில் அருகில் உள்ள இடங்களைப் பார்க்க நான் செல்ல இருப்பதைத் தெரிவித்து, ஒரு டிக்கட் ரிசர்வ் செய்யும்படி கேட்டுக் கொண்டேன்.

இந்துக்களின் மகாக்ஷேத்திரங்களில் புரியும் ஒன்று. இதைப் 'புரி ஜகந்நாதம்' என்று குறிப்பிடுவது மரபு. கடற்கரையில் அமைந்துள்ள புராதன க்ஷேத்திரம் இது. அன்னை ஸ்ரீசாரதாதேவியார் மற்றும் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் நேர் சீடர்கள் பலரும் வெவ்வேறு காலங்களில் இந்த க்ஷேத்திரத்தில் வந்து தங்கியிருக்கிறார்கள். ஸ்ரீகிருஷ்ண சைதன்யர், அஷ்டபதி இயற்றிய ஜயதேவர் ஆகியோரின் வாழ்க்கையில் முக்கிய இடம் பெற்றுள்ள இந்தப் புண்ணியபூமி சிறப்பாக வைணவர்களுக்கு உரியது. இங்கு வரும் யாத்திரிகர்களில் பெரும்பாலோர் வங்காளிகள். இங்கு ஸ்ரீ ஆதிசங்கரர் ஸ்தாபித்த ஒரு பீடமும் இருக்கிறது. வைஷ்ணவ சம்பிரதாயத்தைச் சேர்ந்த பாபாஜிகள் வாழும் பல மடங்கள் இருக்கின்றன. ஸ்ரீ ஆதிசங்கரர், ஸ்ரீ வல்லபாசாரியார் உட்பட பல மகான்கள் இங்கு தங்கியிருந்து இந்து சாஸ்திரங்களைப் பயின்றதாகக் கூறுகிறார்கள்.

மாலை நான்கு மணிக்கு சுவாமி தத்வஸ்தானந்தரைச் சந்தித்தபோது, மறுநாள் டூரிஸ்ட் பஸ்ஸில் செல்ல எனக்கு டிக்கட் ரிசர்வ் செய்யப்பட்டுவிட்டதாகக் கூறினார். பிறகு மடத்து அன்பர் ஒருவரை ஜகந்நாத ஆலயத்திற்கு என்னுடன் அனுப்பி வைத்தார்.

மடத்து அன்பரும் நானும் ஜகந்நாதர் ஆலயத்திற்கு நடந்து சென்றோம். மாணவரில்லத்திலிருந்து சுமார் மூன்று பர்லாங் தூரத்தில் ஜகந்நாதர் ஆலயம் அமைந்துள்ளது. ஆலயத்தின் நுழைவாயிலிலேயே ஓர் ஓரத்தில் சுவரில் ஜகந்நாதரின் திருவுருவத்தை வரைந்து வைத்திருக்கிறார்கள். கோவிலில் ஸ்ரீ ஜகந்நாதரைத் தரிசிக்க இயலாதவர்கள், வெளி நாட்டுக்காரர்கள் ஆகியோர் சுவரில் வரையப் பட்டுள்ள ஜகந்நாதரை தரிசிப்பது, கர்ப்பகிரகத்தில் எழுந்தருளியுள்ள ஜகந்நாதரை தரிசிப்பதற்குச் சமம் ஆகும் என்று கூறுகிறார்கள்.

ஜகந்நாதர் கோயிலின் அமைப்பு புவனேசுவரம் லிங்கராஜ் ஆலயத்தைப் போலவே அடிப்பாகம் அகலமில்லாமல் கோபுரம் நீண்டு குறுகிக்கொண்டே சென்று உயர்ந்து போகிறது. இந்த முறையில் வட இந்தியாவிலுள்ள பல கோவில்கள் அமைந்திருக்கின்றன.

தமிழ் நாட்டில் உள்ளதைப் போல இல்லாமல் பொதுவாக வட நாட்டில் இந்துக் கோவில்கள் சிறியனவாகவே காணப்படுகின்றன. அதுபோல இல்லாமல் புரி ஜகந்நாதர் ஆலயம் தமிழ் நாட்டிலுள்ள ஒரு கோவிலைப் போல பெரியதாகவும் நான்கு திசைகளிலும் நுழைவாயில்களைக் கொண்டதாகவும் அமைந்திருக்கிறது.

கோவிலின் உள்ளே உள்ள கோபுரங்களில் கீழ்ப்பகுதியாக அமைந்திருக்கும் சிறிய பகுதிகளில் உள்ள வேலைப்பாடுகளை மட்டுமே நாம் காண முடிகிறது. எஞ்சிய பெரும்பகுதிகளை காரையும் சிமெண்டும் பூசி மூடியிருக்கிறார்கள். பல நூறு ஆண்டுகளாகக் கோபுரம் முழுவதுமே காரை பூசியபடியே இருந்து வந்ததாம். சமீபத்தில் சில ஆண்டுகளுக்கு முன்பு ஒரிஸ்ஸா அரசாங்கம் கோபுரத்தின் மீது பூசப்பட்டுள்ள சிமெண்ட் பூச்சை நீக்க முற்பட்டதாகவும், அதற்குக் கோயில் பண்டாக்களும் பக்தர்களும் உள்ளூர்வாசிகளும் எதிர்ப்புத் தெரிவித்ததால் மேற்கொண்டு சிமெண்ட் பூச்சை நீக்காமல் அரசாங்கம் விட்டுவிட்டது என்றும் உடன் வந்த அன்பர் தெரிவித்தார். அரசாங்கத்தினர் சிமெண்ட் பூச்சை நீக்கிய கீழ்ப் பகுதியில் உள்ள வேலைப்பாடுகளை மட்டுமே நாம் இப்போது காண முடிகிறது. 'ஆலயத்தின் புனிதத் தன்மை போய்விடும்; முன்பு இருந்ததைப் போலவே இருக்கவேண்டும்' என்று கூறி மக்கள் சிமெண்ட் பூச்சை அரசாங்கம் நீக்குவதற்கு எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறார்கள்.

கோபுரம் முழுவதிலுமே அதன் கீழ்ப்பகுதிகளில் காணப்படுவதைப் போலவே வேலைப்பாடுகளுடன் கட்டப்பட்டதாம். முஸ்லீம்கள் வடஇந்தியாவில் பல இந்து கோவில்களை அழித்திருப்பதைப் போல, வேலைப்பாடுகள் மிகுந்த புரி ஜகந்நாதரின் கோவிலையும் அழித்துவிடக் கூடும் என்ற அச்சம் காரணமாகவே இங்கு கோபுரத்தின் வேலைப்பாடுகள் பார்ப்பவர்களுக்குத் தெரியாத வகையில் சிமெண்ட் பூச்சால் இந்துக்கள் அந்நாளில் மூடி மறைக்க வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது என்று சிலர் கூறுகிறார்கள். வேறு சிலர், ' ஜகந்நாதர் ஆலயம் கடற்கரைக்குச் சமீபத்தில் இருப்பதால், உப்புக் காற்று வீசுவது காரணமாகக் கோபுரம் பாதிக்கப்படும் என்பதற்காக சிமெண்ட் பூசி மூடியிருக்கிறார்கள் ' என்றும் கூறுகிறார்கள். இந்தத் தகவல்களை உடன் வந்த அன்பர் தெரிவித்தார். அவரிடம், " கடற்கரை உப்புக் காற்று காரணமாகக் கோவில் பாதிக்கப்படும் என்று சொல்வதற்கில்லை. உதாரணமாகச் சென்னையில் கபாலீச்வரர் கோவில், பார்த்தசாரதி கோவில் ஆகியவை இருக்கின்றன. கன்னியாகுமரியிலும், திருச்செந்தூரிலும் கோவில்கள் இருக்கின்றன. அங்கெல்லாம் உள்ள கோவில் கோபுரங்கள் உப்புக் காற்றால் பாதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை " என்று அப்போதைக்கு மனதில் பட்டதைக் கூறினேன்.

புரியில் சிறியனவாகவும் பெரியனவாகவும் பல கோயில்கள் இருக்கின்றன. அவற்றில் அளவிலும் முக்கியத்துவத்திலும் முதலிடம் வகிப்பது ஜகந்நாதர் ஆலயம்தான். உடன் வந்த அன்பர் கர்ப்பகிருகத்திற்குள் அழைத்துச் சென்றார். இங்கு ஜகந்நாதர் (ஸ்ரீகிருஷ்ணர்), சுபத்திரை, பலபத்திரர் (பலராமர்) ஆகிய மூவரும் அருள் பாலிக்கிறார்கள். ஜகந்நாதருக்கும் பலபத்திரருக்கும் இடையில் சுபத்திரையைக் காண்கிறோம். கர்ப்பகிருகத்தில் உயர்ந்துள்ள மேடையின்மீது உள்ள இம்மூன்று திருவுருவங்களும் பூரணமடையாமல் காணப்படுகின்றன. அதற்குக் காரணமாகச் சுவையான பல கதைகள் வழங்கி வருகின்றன. கர்ப்பகிருகத்தில் சுவாமி தரிசனத்தின் போது எத்தனை எத்தனையோ சிந்தனைகள் உள்ளத்தில் முட்டிமோதி நின்றன. அதை எழுதவோ, சொல்லவோ மனமில்லை. ஒருவாறு சொல்வதானால் உள்ளத்தில் பூரண கும்பம் வைக்கப்பட்டதைப் போன்ற நிறைவு ஏற்பட்டது என்று சொல்லலாம்.

உடன் வந்த அன்பர் கர்ப்பகிருகத்திலிருந்த பண்டா ஒருவரிடமிருந்து துளசிதளங்களைப் பிரசாத

மாகப் பெற்று வந்து கொடுத்தார். பிறகு கர்ப்ப கிருகத்திற்கு எதிரிலுள்ள மண்டபத்திற்கு (நாட் மந்திருக்கு) அழைத்துச் சென்றார். அங்கு ஓர் இடத்திலுள்ள கற்சுவரை ஒரு கையால் பிடித்துக் கொண்டு, "இப்படித்தான் இங்கு நின்றபடியே ஸ்ரீ சைதன்ய மகாபிரபு ஜகந்நாதரைத் தரிசிப்பது வழக்கம். கர்ப்பகிரகத்தில் ஜகந்நாதரை அருகி லிருந்து தரிசித்தால் ஸ்ரீ சைதன்யதேவரால் தமது தெய்விக உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த இயலாமல் போய்விடுமாம். அதற்காக இங்கிருந்தே அவர் ஜகந்நாதரைத் தரிசித்து வந்தாராம்" என்றார், உடன் வந்த அன்பர். சுவரில் கை வைத்திருந்த இடத்தில் கல் குழிவிழுந்து கைவிரல்கள் பதிந்துள்ள அடையாளத்தைப் பார்க்கிறோம்.

"இந்தக் கை விரல்கள் பதிந்துள்ள அடையாளம் ஸ்ரீ சைதன்ய மகாபிரபுவினுடையது என்று கூறப்படு கிறது. தரையிலும் இருந்த கல் குழிவிழுந்து அவரது காலடிச் சுவடுகள் பதிந்திருந்ததாம். அந்தப் பகுதிக் கல்லைத் தரையிலிருந்து தனியாகப் பெயர்த்துக் கொண்டுபோய் இங்கே கோவிலிலேயே ஒரு பகுதியில் வைத்திருக்கிறார்கள். வெளியே உள்ள பிரகாரத்தைச் சுற்றி வரும்போது நாம் அதைப் பார்க்கலாம்" என்று அன்பர் கூறினார்.

மண்டபத்திலிருந்து வெளியே வரும்போது யாத்திரிகர்களின் தலையில் பிரம்பால் லேசாக ஒருவர் தட்டுவதையும் அவருக்கு யாத்திரிகர்கள் காசு கொடுப்பதையும் கவனித்தேன். கையில் பிரம்புடன் மேலும் சில பேர் இவ்விதம் செய்து கொண்டிருந் தார்கள். 'பிரம்பால் அடியையும் வாங்கிக்கொண்டு பணமும் வேறு தர வேண்டுமா?' என்ற கேள்வி நம் போன்றவர்களுக்கு எழுவது இயல்பு. அவர்களின் செயலுக்கு 'நமது தீய வினைகளை அவர்கள் உதறி விடுகிறார்கள்' என்பது போல மத ரீதியில் ஏதோ காரணம் சொல்கிறார்கள். காரணத்தை அறிந்த போது, நமது பாவங்களை இவ்விதம் போக்கிவிட இயலுமா என்ற எண்ணமும் அத்துடன் 'கங்கைக் கரையில் பாவங்கள் காத்திருக்கின்றன' என்ற ஸ்ரீ ராமகிருஷ்ணரின் கருத்தும் நினைவுக்கு வந்தன. எனினும் ஸ்ரீ கிருஷ்ண சைதன்யரே இந்த வகை யிலான அடியையும் வாங்கிக்கொண்டு அடித்த வருக்குக் காசும் கொடுத்திருக்கிறார் என்று சொல்லக் கேட்டதாலும், பெரியோர்களால் இது அங்கீகரிக் கப்பட்டிருக்கிறது என்பதாலும் அந்த அடியை வாங்கிக்கொண்டு அடித்தவருக்கு ஒரு நாணயமும் கொடுத்தேன்.

மண்டபத்திலிருந்து வெளியே வந்ததும் சற்று உயரத்தில் கட்டப்பட்டுள்ள சிறிய மண்டபத்தைப் பார்க்கிறோம். அதை 'பண்டிதர்களின் மண்டபம்' என்கிறார்கள். அங்கு பிராம்மணர்கள் பலர் அமர்ந்து வம்பளத்துக் கொண்டிருக்கும் காட்சியைக் கோவிலில் எப்போது நுழைந்தாலும் பார்க்கலாம். அந்தப் பிராம்மணர்களிடம் ஏதோ பேசிவிட்டு சில யாத்திரிகர்கள் அவர்களுக்குப் பணமும் கொடுக் கிறார்கள். பண்டை நாளில் சாஸ்திரங்களை நன்கு கற்றறிந்த பெரும் அறிஞர்கள் அந்த மண்டபத்தில் அமர்ந்திருப்பார்களாம். அவர்களிடம் சென்று தங்கள் சந்தேகங்களையும் பிரச்னைகளையும் தெரிவித்து மக்கள் நிவர்த்தி பெறுவார்களாம். இப்போது அங்கு பண்டிதர்கள் இருப்பதாகவோ அவர்கள் சந்தேகங்களைத் தீர்த்து வைத்து ஆறுதல் சொல்வதாகவோ தெரியவில்லை.

கோயில் பிரகாரங்களில் பல சந்நிதிகள் இருக் கின்றன. சிவபெருமானின் சந்நிதிக்குச் சென்று தரிசித்துவிட்டு விமலாதேவியின் சந்நிதிக்குச் சென்றோம். பிரகாரங்களில் எத்தனையோ மூர்த்தி களுக்குச் சந்நிதிகள் இருந்தாலும் விமலாதேவியின் சந்நிதியில் ஒரு தனி மகத்துவம் இருக்கவே செய்கிறது. இங்கு ஸ்தூல வடிவம் பெற்றுவிட்ட தைப் போல் தெய்விகத்தை அடர்த்தியாக உணர் கிறோம். தேவியைத் தரிசித்து வெளியே வந்ததும், சக்தி உபாசகர்கள் சிறப்பாகக் குறிப்பிடும் 51 சக்தி பீடங்களில் இங்குள்ள விமலாதேவியின் சந்நிதியும் ஒன்றாகும் என்று உடன் வந்தவர் தெரிவித்தார்.

விமலாதேவியைத் தரிசித்துவிட்டு இலட்சுமிதேவி யின் சந்நிதிக்குச் செல்லும் வழியில் கோயிலின் மற்றொரு நுழைவாயிலைப் பார்க்கிறோம். அங்கு கண்காட்சி ஒன்று நடந்து கொண்டிருந்தது. பார்வையாளர்கள் ஐம்பது காசு கட்டணம் செலுத்தி கண்காட்சியைப் பார்க்கச் சென்று கொண்டிருந்தார் கள். நாங்களும் டிக்கட் பெற்று அதைக் காணச் சென்றோம். பல வண்ணங்கள் தீட்டிய அழகிய மண் பொம்மைகளின் மூலம் அந்தக் கண்காட்சி யில் இராமாயணம், மகாபாரதம், பாகவதம் பற்றிய நிகழ்ச்சிகளைச் சித்தரித்திருந்தார்கள். அழகிய பொம்மைகளுக்கு மேலும் அழகு சேர்க்கும் வகை யில் பல வண்ண மின்சார பல்புகளைப் பொருத்தி யிருந்தார்கள். அவற்றில் கண்ணன் அர்ஜுனனுக்கு அருளிய விச்வரூப தரிசனமும் தசாவதாரக் காட்சி களும் மிக மிக நேர்த்தியாக, உயிர் ததும்புவதாக அமைந்திருந்தன.

அடுத்து இலட்சுமி தேவியின் சந்நிதிக்குச் சென்று தரிசித்தோம். அங்கும் சிறிய ஒரு நாட்மந்திர் இருக்கிறது. தூய அன்னை ஸ்ரீசாரதா தேவியார் புரியில் தங்கியிருந்த காலத்தில், ஜகந்நாதரையும் பிற சந்நிதிகளில் உள்ள மூர்த்திகளையும் தரிசித்து முடித்தபின் அந்த நாட்மந்திரில் அமர்ந்து ஜபம் தியானம் செய்வது வழக்கம் என்று உடன் வந்தவர் கூறினார். கோவிலுக்கு என்னை அழைத்துச் சென்ற அன்பரும் நானும் அந்த நாட்மந்திரில் இலட்சுமி தேவியை நோக்கி அமர்ந்து சிறிதுநேரம் தியானம் செய்தோம்.

கோயில் பிரகாரங்களில் பெரியாழ்வார், ஆண்டாள், வடபத்ரசாயி ஆகியோருக்கும் சந்நிதிகள் அமைத்திருக்கிறார்கள்.

புரி ஜகந்நாதர் கோயில் ஒரு காலத்தில் புத்தர் ஆலயமாக இருந்தது என்றும் பிற்காலத்தில் ஆதி சங்கரர் அதை இந்துக் கோவிலாக மாற்றினார் என்றும் சொல்லப்படுவதுண்டு. அது குறித்து உடன் வந்தவரைக் கேட்டேன். அவர், "அப்படிச் சொல்வதிலும் உண்மை இருக்கக்கூடும்" என்று கூறி சூரிய பகவானுக்கு அமைக்கப்பட்டுள்ள சந்நிதிக்கு அழைத்துச் சென்றார். சூரிய பகவானைத் தரிசித்து முடித்தவுடன், சூரிய பகவானுக்குப் பின்புறமாகப் பெரிய கற்பலகை சுவர் போல வைக்கப்பட்டிருப்பதைக் காட்டினார். சூரிய பகவானை வலம் வருபவர்கள் சுவர் போலவே அமைந்திருக்கும் பாறையையும் வலம் வந்து விடுவார்கள். அவ்விதம் நாங்களும் வலம் வந்தபோது சூரிய பகவானின் சந்நிதியிலிருந்து உடன் வந்த அன்பர் ஒரு அகல் விளக்கைக் கொண்டு வந்தார். அந்த விளக்கை அவர் சூரிய பகவானுக்குப் பின் புறத்திலும் கற்பலகைக்கும் இடையிலுள்ள இடுக்கு வழியாகக் காட்டினார். அகல் விளக்கின் மங்கிய ஒளியில் அங்கு ஆள் உயரத்தில் புத்த பகவானின் தியானநிலையிலுள்ள அற்புதமான அழகிய கற்சிலை ஒன்று இருந்ததைக் கண்டேன். பொதுவாக அங்கே ஓர் இடுக்கில் இடைவெளி இருப்பதோ, உள்ளே புத்தர் சிலை இருப்பதோ மக்கள் அறிந்து கொள்ளும் வகையில் இல்லை. "ஒரிஸ்ஸா மாநிலம் என்று இப்போது அழைக்கப்படும் இந்தப் பகுதி பண்டைக் காலத்தில் கலிங்கநாடு என்று அழைக்கப் பட்டது. அசோகச் சக்கரவர்த்தி நிகழ்த்திய கலிங்கப் போருக்குப் பிறகு இந்தப் பகுதிகளில் பௌத்த மதம் வெள்ளமாகப் பாய்ந்து பரவியது. சாம்ராட் அசோகருக்குப் பிறகும்கூட பௌத்த மதமே இங்கு செங்கோலோச்சியது. அந்நாளில் முழுக்க முழுக்க பௌத்த மதத்தினரின் ஆதிக்கத்திலேயே இந்தப் பகுதிகள் இருந்திருக்கின்றன. இந்துக்கள் இந்த ஆலயத்தைத் தங்களுக்கு உரியதாகப் பிற்காலத்தில் செய்தபோதிலும் இங்கிருந்த புத்தர் பெருமானின் திருவுருவத்தை அழித்துவிடாமல் சூரிய பகவானின் பின்புறத்தில் கொண்டு வந்து வைத்து விட்டார்களாம். இங்கு நாம் காணும் சூரிய பகவானின் விக்கிரகம் கோணார்க்கிலுள்ள சூரிய பகவானின் ஆலயத்திலிருந்து கொண்டு வரப் பட்டதாகவும் கூறப்படுகிறது" என்று பல சுவாரஸ்யமான தகவல்களை உடன் வந்தவர் கூறினார்.

அடுத்துச் சிறியதாக அமைந்துள்ள ஒரு சந்நிதிக்குச் சென்றோம். அங்கு கற்பாறையில் அமைந்த காலடிச்சுவடுகள் மட்டுமே இருப்பதைக் கண்டோம். கர்ப்பகிருகத்திற்கு எதிரிலுள்ள நாட் மந்திரில் பதிந்திருந்த ஸ்ரீசைதன்ய மகாபிரபுவின் திருவடிகளே அவை என்று சொல்லப்படுவதாக உடன் வந்தவர் விளக்கினார்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் புரி ஜகந்நாதர் கோயிலின் பிரசாதம் பற்றி வெகுவாகச் சிறப்பித்துக் கூறியுள்ள கருத்துக்கள் என் நினைவுக்கு வந்தன.

கோயிலின் ஒரு பகுதி போன்று கோவிலையொட்டி பிரசாதங்கள் விற்கப்படும் இடத்திற்குச் சென்றோம். ஒரு சிறிய கடைவீதி போலவே அந்த இடம் காணப்படுகிறது. சுமார் இருபத்தைந்து கடைகள் அங்கு இருக்கின்றன. அந்தக் கடைகளில் ஸ்ரீ ஜகந்நாதருக்கு நிவேதனம் செய்யப்பட்ட விதவிதமான பலவகையான இனிப்புத் தின்பண்டங்கள் விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்தன. ஒரு கடையில் இனிப்புத் தின்பண்டங்களைப் பெற்று நாங்களும் உட்கொண்டோம்.

அங்கிருந்து கோவிலுக்கு வெளியே வரும் வழியில் மதசம்பந்தமான புத்தகங்கள் விற்பனைக்கு வைக்கப்பட்டுள்ள கடைகள் வழியாக வந்தோம். ஒவ்வொரு கடையிலுமே ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வெளியிட்டுள்ள நூல்கள் ஆங்கிலம், இந்தி, ஒரியா, வங்கமொழிகளில் நிறைந்திருந்தன. சில கடைகளை அணுகி நான் விசாரித்தபோது, ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் நூல்களுக்கு யாத்திரிகர்களிடையே அமோகமான வரவேற்பு இருக்கிறது என்பது தெரிய வந்தது. சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் ஆங்கில நூல்கள் அங்கு கொலு வீற்றிருப்பதைக் கண்டபோது எனக்குப் பெருமிதமாக இருந்தது.

கோவிலைவிட்டு வெளியே வந்ததும் ஒரு சைக்கிள் ரிக்ஷாவை ஏற்பாடு செய்துகொண்டு சுமார் இரண்டு

கிலோ மீட்டர் தூரத்தில் புரியின் ஒரு பகுதியாக விளங்கும் சக்கரதீர்த்தத்திற்குக் கிளம்பினோம்.

சக்கரதீர்த்தத்திலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் கிளை பல ஆண்டுகளுக்கு முன்பே துவக்கப்பட்டது. பிற்காலத்தில் இராமகிருஷ்ண மிஷனின் கிளை ஒன்றும் புரியில் தோன்றியது. நான் இராமகிருஷ்ண மிஷனின் கிளையில் தங்கியிருந்தேன். நகரத்தின் நடுவிலும் ஸ்ரீ ஜகந்நாதர் கோயில், ரயில்வே ஸ்டேஷன், பஸ் நிலையம் ஆகியவற்றுக்கு அருகாமையிலும் மிஷனின் கிளை அமைந்துள்ளது. அது போன்று இல்லாமல் ஊரின் எல்லை போன்று விளங்கும் சக்கரதீர்த்தத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் கிளை அமைந்துள்ளது.

மக்கள் ஆரவாரத்திலிருந்து விடுபட்டு கடற்கரையை ஒட்டிய அமைதியான சூழ்நிலையில் அமைந்துள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடத்திற்குச் சென்றோம். அங்கு வயது முதிர்ந்த சன்னியாசிகள் இருவரும், சமீபத்தில் சில மாதங்களுக்கு முன்பு மடத்தில் சேர்ந்த பிரம்மசாரி ஒருவரும் இருக்கிறார்கள். மடத்தின் நுழைவாயிலாக அமைந்துள்ள சிறிய தகரக் கதவு அந்த ஆச்ரமத்தின் ஏழ்மை நிலையை நுழையும் போதே அறிவித்து விடுகிறது. கதவு எழுப்பிய சப்தம் கேட்டு பிரம்மசாரி வெளியே வந்து வரவேற்றார்.

மடத்தில் ஸ்ரீகுருதேவரின் சந்நிதிக்குச் சென்று நமஸ்கரித்து வந்தவுடன், ''மற்ற சுவாமிகள் இருவரும் எங்கே?'' என்று பிரம்மசாரியிடம் கேட்டேன். ''ஒருவர் கடற்கரைப் பக்கமாக உலாவச் சென்றுள்ளார்; சிறிது நேரத்தில் திரும்பி விடுவார். மற்றொருவர் தோட்டத்தில் இருக்கிறார்'' என்று பிரம்மசாரி பதில் கூறினார்.

தோட்டத்திற்குச் சென்றபோது முதிய துறவி ஒருவர் மடத்தைச் சேர்ந்த மேட்டுப் பகுதிகளை மண்வெட்டியைக் கொண்டு சமப்படுத்திக் கொண்டிருந்தார். எண்பத்தி நான்கு வயது நிரம்பிய அவர் சுவாமி சாரதானந்தரின் சீடராவார் நான் அவர் அருகில் சென்று நமஸ்கரித்து, ''மகராஜ், நான் சென்னையிலிருந்து வருகிறேன். இந்த ஆண்டு சன்னியாசம் பெறுவதற்காக பேலூர் மடம் செல்கிறேன்'' என்று தெரிவித்துக் கொண்டேன். அவர் மகிழ்ச்சியுடன் சிரித்தபடியே, ''ஓ அப்படியா, நல்லது. ஸ்ரீஸ்ரீ டாகுர் உன்னை ஏற்றுக்கொள்வாராக!'' என்று கூறினார்.

சன்னியாசம் பெறுவதற்கு நான் பேலூர் மடம் சென்று கொண்டிருந்த அந்தச் சமயத்தில் அவர் அவ்விதம் கூறியது எனக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது. பிறகு கை கால்களைக் கழுவிக்கொண்டு அவர் மடத்திற்குள் என்னையும் உடன் அழைத்து வந்தார். தென்னிந்தியாவிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்களைச் சேர்ந்த சாதுக்கள், பிரம்மசாரிகள் ஆகியோரின் நலன்களை அவர் விசாரித்துக்கொண்டிருந்தபோது உலாவச் சென்றிருந்த சுவாமிஜியும் வந்து சேர்ந்தார். அவரிடமும் பேசிக்கொண்டிருந்தபோது, மாலை ஆரதிக்கு நேரம் நெருங்கி விட்டது. முதலில் நான் சந்தித்த சுவாமிஜி பூஜாரியாக இருந்து ஆரதியை நிகழ்த்தினார். பக்தர்கள் உட்பட ஆறுபேர் ஆரதியில் கலந்து கொண்டோம்.

ஆரதிக்குப் பிறகு சுவாமிகள் இருவரும் கொடுத்த பொரி, டீ ஆகியவற்றைச் சாப்பிட்டு முடித்தப்பின் மிஷனின் கிளைக்குப் புறப்பட்டேன். மறுநாள் நான் டூரிஸ்ட் பஸ்ஸில் செல்ல இருந்ததால் 21-2-79 ஆம் நாள் பகல் உணவுக்கு மடத்திற்கு வரும்படி சுவாமிகள் இருவரும் கூறினர். அவ்விதமே செய்வதாக ஒப்புக் கொண்டு மடத்திலிருந்து கிளம்பினேன்.

ஜகந்நாதர் ஆலயத்திற்கு உடன் வந்த அன்பர், சக்கரதீர்த்தம் பகுதியிலுள்ள சிவன் கோயில், ஆஞ்சநேயர் கோயில், இராமர் கோயில், ஸ்ரீராதாகாந்தர் கோயில், சோனார் கௌராங்கர் கோயில் ஆகியவற்றுக்கும் என்னை அழைத்துச் சென்றார். பிறகு எனக்கு ஒரு சைக்கிள் ரிக்ஷாவை ஏற்பாடு செய்து என்னை வழியனுப்பிவிட்டு சக்கரதீர்த்தம் மடத்திற்குத் திரும்பி சென்றார்.

இரவு 8-15 மணிக்கு ரிக்ஷாவில் மிஷனின் கிளைக்குத் திரும்பினேன்.

* * *

புரியில் நான் தங்கியிருந்த அடுத்த சில தினங்களில் மேலும் அங்கு காண வேண்டிய பல இடங்களுக்கும் சென்றிருந்தேன். புரியிலிருந்து பேலூர் மடம், காமார்ப்புகூர், ஜயராம்பாடி, ஹரித்துவார், ரிஷிகேஷ், உத்தரகாசி, டேராடூன், தில்லி, பிருந்தாவனம், மதுரா, அக்ரா, பிரயாகை, சித்திரகூடம், அயோத்தி, கயை, புத்த கயை, சாரநாத், காசி ஆகிய இடங்களுக்குச் சென்றுவிட்டு 2-5-79 ஆம் நாள் இரவு ஏழு மணிக்குசென்னை திரும்பினேன். இரண்டரை மாத காலம் நடைபெற்ற இந்தப் பயணம் ஒரு தீர்த்த யாத்திரிகைக்குரிய எல்லா அம்சங்களுடன் திகழ்ந்து பல படிப்பினைகளைத் தந்ததற்குக் காரணமாகிய இறைவனை மீண்டும் மீண்டும், வழுத்துகிறேன். *

# திங்கள் நிலா

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்



இறைவனைச் சார்ந்த எல்லாப் பொருள்களும் இயல்பாக மெலிவுடையவையாக இருந்தாலும் சார்ந்த இடத்தின் சிறப்பினால் வலிமையைப் பெறும். பாம்புக்குக் கருடன் பகை. கருடனைக் கண்டால் பாம்புகள் அஞ்சும். ஆனால் சிவபெருமான் அணிந்துள்ள பாம்புகள் கருடனைக் கண்டு அஞ்சுவதில்லை. ''ஏன் கருடா சுகமா?' என்று அந்தப் பாம்புகள் கேட்டனவாம். ''இருக்கிற இடத்தில் இருந்தால் சுகந்தான்'' என்று கருடன் சொல்லியதாம். இதிலிருந்து சார்பின் பலத்தினால் மிக்க வலிமையும் துணிச்சலும் உண்டாகும் என்பது தெரியவரும்.

சந்திரன் சூரியனைவிட ஒளி குறைந்தது. சூரியனிடத்திலிருந்தே சந்திரன் ஒளியைப் பெறுகிறதென்று விஞ்ஞானம் சொல்கிறது. புராணமும் அப்படித்தான் சொல்கிறது. இரவில் ஒளி தருவது சந்திரன். அது நாளுக்கு நாள் தேய்ந்து வருவது. மறுபடியும் வளர்வது. சூரியனுக்கு அந்தக் குறைபாடு இல்லை. சூரியனுடைய ஒளி பகலில் நன்றாகப் பரவும். அதன் முன் சந்திரன் ஒளியிழந்து நிற்கும்.

இறைவன் திருமுடியில் இருக்கும் சந்திரன் தேய்வதில்லை; வளர்வதில்லை; இறைவனைச் சார்ந்ததனால் உண்டான வலிமை அது. இறைவன் முடிமேல் இருப்பதால் மக்கள் அதை வணங்குகிறார்கள்.

இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்கிறார் காரைக்கால் அம்மையார். இறைவன் சடையில் உள்ள நிலா எப்படி ஒளிவீசும்? சூரியனுடைய ஒளி மிகப் பிரகாசமாக இருக்குமே. வானில் உள்ள சந்திரனுடைய ஒளி அவ்வளவு பிரகாசமாக இருப்பதில்லை. ஆனால் சிவபெருமானுடைய திருமுடித் திங்கள் அவனுடைய சார்பு பெற்றதனால் தனித்தன்மை உடையதாக இருக்கிறது. அதன் ஒளி எப்படி இருக்கும்?

ஒருகால் அதன் ஒளி கதிரவனுடைய ஒளியைவிட மிகுதியாக இருக்குமோ? பகலில் அந்தச் சந்திரன் ஒளி வீசினால் சூரியனுக்கு நிகராக வீசுமோ? இப்படியெல்லாம் அம்மையார் எண்ணிப் பார்க்கிறார்.

இறைவன் சோதிகளுக்கெல்லாம் பெரிய சோதி. அவனை, ''ஆதியும் அந்தமும் இல்லா அருப்பெருஞ் சோதி'' என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். அந்தச் சோதியின் முடிமேல் சந்திரன் வீற்றிருக்கிறான். அவனுக்கு அந்தப் பரஞ்சோதியின் சார்பினால் அதிகமான ஒளி கிடைத்திருக்கும். வான சூரியனை விட இறைவனாகிய ஞான சூரியன் எத்தனையோ மடங்கு மிகுதியாக ஒளிவிடும் பரஞ்சுடர். வானத்தில் உலாவும் சந்திரன் வான சூரியனிடம் ஒளி பெற்று விளங்குகிறது. ஆனால் இந்தச் சந்திரனோ அரும்பெருஞ் சோதியாகிய இறைவனுடைய பலத்தைப் பெற்றிருக்கிறது. ஆகையால் நிச்சயமாக இந்தச் சந்திரனுக்குச் சூரியனைவிட எத்தனையோ மடங்கு மிகுதியான ஒளி இருக்கத்தான் வேண்டும்.

ஒருகால் இப்போது வானத்தில் உலவும் கதிரவன் ஏதோ காரணத்தால் ஒரு நாள் வரமுடியவில்லை என்றுவைத்துக் கொள்வோம். அப்போது இறைவன் முடியில் உள்ள திங்கள் சூரியன் இல்லாத குறையைப் போக்கித் தானே கதிரவனைப் போல ஒளி விடுமோ?

இப்படியெல்லாம் எண்ணம் இட்டார் காரைக்கால் அம்மையார். சும்மா இருக்கும் சமயங்களில் நம்முடைய மனதில் எத்தனையோ எண்ணங்கள் தோன்றுகின்றன. எல்லாம் உலகியலோடு சம்பந்தம் உள்ளனவாகவே இருக்கும். சில சமயங்களில் பலவிதமான பைத்தியக்கார எண்ணங்கள் தோன்றும்.

ஆனால் இறைவனிடம் ஈடுபட்ட உள்ளங்களில் இறைவனோடு தொடர்புடைய எண்ணங்களே தோன்றிக்கொண்டிருக்கும். இரவிலே துயிலும்போது காணும் கனவுகளில் இறைவனோடு தொடர்புடைய காட்சிகளே தோன்றும். பகலில் உண்டாகும் சிந்தனைகளிலும் கற்பனைகளிலும் இறைவனுடன் தொடர்புடைய காட்சிகளே வரும்.

காரைக்கால் அம்மையாருடைய சிந்தனைகளும், கற்பனைகளும் அத்தகையனவே. இதுவரையில் நாம் பார்த்த பாடல்களில் அப்படி அமைந்த கற்பனைகளையும், அவற்றிலிருந்து எழுந்த விசித்திரமான கேள்விகளையும் பார்த்தோம்.

இறைவன் திருமுடிமேல் அணிந்த சந்திரனைப் பற்றி எண்ணும்போது அம்மையாருக்கு முன்னே சொன்ன எண்ணங்கள் தோன்றுகின்றன.

இறைவனையே நோக்கி ஒரு வினாவை எழுப்புகிறார்.

"தேவரீருடைய திருமுடிமேல் இருக்கும் சந்திரன் சூரியனுக்குச் சமானமாகப் பிரகாசிக்குமோ?" என்று கேட்கிறார்.

பார்ப்பதற்கு அழகான வடிவை உடையது சூரியன். அதுவும் காலை நேரத்தில் கதிரவன் உதயமாகும் போது பார்த்தால் கண் கொள்ளாத காட்சியாக இருக்கும். அந்தச் செங்கதிருக்கு மாறாகச் சந்திரன் தன் ஒளியை வீசுமோ? பகல் நேரத்தில் வானத்தில் நெடிது உலவி அந்தச் சந்திரனுடைய கதிர்கள் எறிக்குமோ? —இவ்வாறு கேட்கிறார்.

வடிவுடைய செங்கதிர்க்கு
மாறாய்ப் பகலிலே
நெடிது உலவி நின்று எறிக்கும்
கொல்லோ?

பகலில் ஒளி தருவதும் நீண்ட நேரத்தில் வானத்தில் உலாவுவதும் வானத்தில் நாம் பார்க்கும் சந்திரனுக்கு இல்லை. ஆனால் இறைவன் திருமுடிச் சந்திரனுக்கு அத்தகைய சிறப்பு இருக்கலாம். ஆதலினால் இப்படிக் கேட்கிறார்.

இறைவனை விளித்தே கேட்கிறார். இறைவனை எப்படி அழைக்கிறார்?

இறைவன் வேறு எங்கும் காணக் கிடைக்காத புதுமையை உடைய சோதி. அவனுடைய திருமேனிச் சோதி ஒளிமயமானது. ஆகவே,

கடிஉலவு .சோதியாய்!

என்கிறார்.

இறைவன் புகழைச் சொல்லப் புகுந்தால் அதற்கு முடிவேயில்லை. "பாதாளம் ஏழினுங்கீழ்ச் சொற்கழிவு பாதமலர்" என்பது திருவாசகம். எவ்வளவு புகழ்ந்தாலும் புகழும் சொல் சோர்வடையுமேயன்றி அவன் புகழுக்கு எல்லை காண முடியாது.

சொல் முடிவு ஒன்று இல்லாத
சோதியாய்!

என்று இறைவனைக் கூறுகிறார். அவனையே, "நான் கேட்கும் வினாவுக்கு விடை சொல்" என்று விண்ணப்பித்துக் கொள்கிறார்.

சொல்லாயால்

'நின் திருமுடிமேல் திங்களை அணிந்திருக்கிறாய். சொல் முடிவு ஒன்று இல்லாத சோதியைச் சார்ந்தமையால் அதற்கும் எல்லையிறந்த ஒளி கிடைத்திருக்கும். ஆகவே கேட்கிறேன்' என்பவரைப் போலப் பேசுகிறார்.

சொல்முடிவு ஒன்று இல்லாத
சோதியாய்! சொல்லாயால்
நின்முடிமேல் திங்கள்நிலா.

'நின் திருமுடிமேல் உள்ள திங்களின் நிலா, சூரியனைப் போல பகலிலும் பிரகாசிக்குமா?' என்று அம்மையார் கேட்கிறார்.

வடிவுடைய செங்கதிர்க்கு
மாறாய்ப் பகலே
நெடிதுலவி நின்றுஎறிக்கும்
கொல்லோ?—கடிஉலவு
சொல்முடிவு ஒன்று இல்லாத
சோதியாய்! சொல்லாயால்
நின்முடிமேல் திங்கள் நிலா.

[புதுமை சேர்ந்த, சொல்லுக்கு முடிவு ஒன்றும் இல்லாத சோதியாக நிற்கும் எம்பெருமானே! நின்னுடைய திருமுடியின் மேல் உள்ள திங்களின் ஒளியானது, வடிவழகுடைய செந்நிறமுள்ள சூரியனுக்கு எதிராகப் பகலில் நீண்டு உலவி நின்று ஒளிவீசுமா? இதைச் சொல்வாயாக.

வடிவு — அழகுருவம். செங்கதிர் — கதிரவன். மாறாய் — எதிராக; ஒப்பாக என்பதும் ஆம். எறிக்கும் — ஒளிவீசும். கடி — புதுமை, கடியுலவு சோதியாய், சொல்முடிவு ஒன்று இல்லாத சோதியாய் என்று கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். நிலா எறிக்கும் கொல்லோ?]

அம்மையார் கெஞ்சினாலும், கொஞ்சினாலும், தத்துவத்தைச் சொன்னாலும், வருணித்தாலும், விசித்திரமாக எண்ணமிட்டாலும், ஆழ்ந்து சிந்தித்தாலும் யாவும் சிவபெருமானைப் பற்றியனவாகவே இருக்கும் இந்தப் பாட்டு விசித்திரமான எண்ணங்களில் ஒன்று.

இது அற்புதத் திருவந்தாதியில் 63-ஆம் பாட்டு. ★



# அன்னையின் அறிவுரைகள்

அ. லெ. நடராஜன்

“கர்மத்தால் கர்மத்தைத் துடைப்பது சாத்தியமா?” என்று சீடர் ஒருவர் ஸ்ரீ அன்னையாரிடம் வினவினர்.

“ஆம், முடியும். இந்தப் பிறவியில் நீர் நற்கருமத்தைச் செய்வீராஞல் அது பழைய தீய கருமங்களுக்கு மாற்ருக அமையும். ஜபம், தியானம், ஆன்மிகச் சிந்தனை ஆகியவற்றின் மூலம் பழைய பாவங்களுக்கு மாற்றுச் செய்துவிடலாம்” என்று அன்னை பதில் தெரிவித்தார்.

**சீடர் :** தாயே! மரணமடைந்த பின் சூட்சும சரீரத்தில் ஒருவர் எவ்வளவு காலம் தங்க நேரும்?

**அன்னை:** பரிபக்குவமடைந்த ஜீவர்களைத் தவிர்த்து, மற்ற மக்கள் எல்லாரும் சூட்சும சரீரத்தில் ஒரு வருடகாலம் தங்கியிருப்பர்.

⁕ ⁕ ⁕ ⁕

அவதார புருடர்கள் காலம், சூழ்நிலை, மக்கள் இயல்பு ஆகியவற்றுக்குத் தக்கவாறு, மக்கள்நலம் கருதித் தங்கள் கருத்தை வெளியிடுகின்றனர். அவதார புருஷர்களின் கூற்றுகளிலேயே பளிச்செனக் கருத்து வேறுபாடு தென்படுவதை நாம் காணலாம். முன்பு உபதேசித்த அவதார புருஷரின் கருத்துக்கு, இப்பொழுது கூறும் அவதார புருஷரின் கருத்து முரண்படுகிறது என்பதற்காக, அவதாரத்தை நிராகரிப்பது கூடாது. இந்த உண்மையைப் பின்வரும் வாக்கியங்களால் அன்னை வெளியிட்டிருக்கிருர்:—

“சத்தியத்தை அறியப் பல வழிகள் உள்ளன. அதனல் போதனைகளும் பலவாருக அமைந்து, இடத்துக்கு உரிய பலனைக் கொடுக்கின்றன. உதாரணமாக, ஒரு மரத்தை எடுத்துக்கொள்வோம். அதன் கிளைகளில் பலவேறு வகைப் பறவைகள் பலவேறு வண்ணங்களில் அமைந்துள்ளன. வெள்ளை, சிவப்பு, மஞ்சள், கறுப்பு முதலிய நிறங்களில் பறவைகள் இருப்பதைப் பார்க்கிருேம்; நிறத்தைப் போலவே அவற்றின் குரல்களும் வேறுபடுகின்றன. ஆயினும் மொத்தமாக அவற்றைப் பறவைகளின் குரல் என்றே கூறுகிருேம். ஒரு குரல்தான் பறவையின் குரல், மற்றவை பறவையின் குரல்கள் அல்ல என நாம் மறுப்பது வழக்கமில்லை.”

காலம், தேசம், சூழ்நிலைகளுக்கு ஏற்ப அவதார புருஷர்களின் போதனைகள் மாறுபடும் என்பது கருத்து. ஆகவே அவதார புருஷர்களைப் புறக்கணிப்பது கூடாது என்பது போதனை.

‘கடவுள் அருள் உள்ளம் படைத்தவர் என்று சான்றேர் கூறுகிருர்கள். ஆயினும் அவருடைய அருள் எல்லாருக்கும் சமமாகக் கிடைக்காமல் இருக்கக் காரணம்என்ன?’— பக்தை ஒருத்தியின் இந்தக் கேள்விக்கு ஸ்ரீஅன்னையார் அடியில் வரும் பதிலைக் கூறியிருக்கிருர்:—

“பெண்ணே! கடவுளின் அருள், குழந்தை கையில் இருக்கும் இனிப்புத் தின்பண்டம் போன்றது. யார் கேட்டாலும் தான் வைத்திருக்கும் தின்பண்டத்தைக் குழந்தை கொடுத்துவிடாது; ஆயினும் தனக்குப் பிரியமானவர்களிடம் அதை வெகு எளிதில் அது கொடுத்துவிடுகிறது. கடவுளின் அருளைப் பெற வேண்டிப் பலர் கடுந்தவம் புரிகின்றனர். அவர்களுக்குக் கடவுள் அருள் கிட்டுவதில்லை. சிலர் முயற்சி எதுவும் இன்றியே கடவுளின் அருளைப் பெற்றுவிடுகின்றனர். இது கடவுளின் திருவுள்ளத்தைப் பொறுத்தது.”

⁕ ⁕ ⁕ ⁕

"சாதாரண மனிதன் தன் உடலை விட்டுச் செல்ல நேரும்போது அழுகிறன்; மகானே சாவை ஒரு விளையாட்டாகக் கருதிச் சிரிக்கிறன்" என்பது அன்னையின் ஓர் உபதேசமாகும்.

இறத்தலும் பிறத்தலும் இயற்கையான நிகழ்ச்சிகள். பிறத்தலைக் கண்டு சிரித்தலும் இறத்தலைக் கண்டு அழுதலும் ஏன் என்பது கருத்து.

இரண்டையும் சமமாக நோக்கும் பரிபக்குவம் சான்றோரைத் தவிர்த்துப் பிறருக்கு உண்டாகாது.

※ ※ ※ ※

தான் ஒழுங்காகச் சாதனைகள் செய்துங்கூட, தனக்கு இறைத் தரிசனம் கிட்டவில்லை என்றும், இறைத் தரிசனம் கிட்டாமல் இருப்பதைவிட இறப்பதே மேல் என்று தனக்குத் தோன்றுவதாகவும் ஓர் அன்பர் கூறினர். அவருக்கு ஸ்ரீஅன்னையார் அடியில் வருமாறு சமாதானம் சொன்னர் :—

"மகனே! இத்தகைய எண்ணம் உனக்கு இருப்பது கூடாது. இது குறித்து ஸ்ரீகுருதேவர் இவ்வாறு கூறுவது உண்டு: ஒருவன் தூண்டிலை வைத்துக் கொண்டு உட்கார்ந்தவுடனே நாள்தோறும் பெரிய மீன் ஒன்றைப் பிடிக்க முடிவதில்லை. தூண்டில் முதலியவற்றை ஒழுங்குபடுத்தி, நிதானமாகவும் கவனத்துடனும் அவன் உட்கார்ந்து இருந்தாலும், எப்பொழுதாவது ஒரு சமயம்தான் பெரிய மீன் ஒன்று அவனுடைய தூண்டிலில் சிக்குகிறது. பல தடவை அவன் ஏமாற நேருகிறது. ஆகவே சாதனை செய்து பழகுவதைத் தளரவிடக் கூடாது. கண்ணும் கருத்துமாக ஜபம் செய்வது அவசியமாகும்."

※ ※ ※ ※

விவாதம் செய்து அறிவுத் தெளிவு பெறுவதன் மூலம் இறைவனைக் காண முடியும் என்று சிலர் எண்ணுகின்றனர். இறைவனை இதயப் பரிபக்குவத்தின் மூலம் காண முடியுமே அல்லாது, வெறும் வறட்டு வாதத்தினுல் காண முடியாது என்பதை அன்னையார் பின்வருமாறு கூறியுள்ளார் :—

"பலவகையில் கெட்டிக்காரத்தனமாக விவாதம் புரிவதை விட்டுவிடுங்கள். தர்க்கம் செய்வதன் மூலம் யாரும் கடவுளைக் காண முடியாது. சுகதேவர், வியாசர் போன்ற முனிவர்கள்கூட, சொல்லப் போனல் பெரிய எறும்பு போன்றவர்களேயாவர்."

※ ※ ※ ※

மோட்சம் அடைந்தவர்கள் மீண்டும் பிறப்பது உண்டா என்பது சிக்கலான கேள்வி; முக்கியமான கேள்வியுங்கூட. இது குறித்து ஸ்ரீ அன்னையிடம் சீடர் ஒருவர், "பரம்பொருளிடத்தில் ஐக்கியமாகி விட்ட மனதை மீண்டும் உலகநிலைக்கு எவ்வாறு திருப்ப இயலும்? ஒரு குடம் தண்ணீரைக் குளத்தில் கொட்டிய பிறகு, அதை மீண்டும் பிரித்துத் தனியே எடுப்பது எவ்வாறு சாத்தியமாகும்?" என்று கேட்டார்.

அன்னை, "அப்படிப் பிரித்தெடுப்பது எல்லாருக்கும் சாத்தியமாகாது. பரமஹம்சர்களுக்கே அது சாத்தியமாகும். நீரும் பாலும் கலந்த பிறகு, பாலை மட்டும் பிரித்துப் பருகும் ஆற்றல் அன்னப் பறவைக்கு உண்டு" என்ருர்.

கடவுளின் அருள் சிலருக்கு வெகு எளிதில் கிட்டிவிடுகிறது. மற்றும் சிலர் எவ்வளவோ முயன்றும் அவர்களுக்குக் கடவுள் கருணை காட்டுவதில்லை. இந்தப் பாரபட்சம் ஏன்?-என்ற ஐயம் யாருக்கும் ஏற்படுவது உண்டு. சீடர் ஒருவருக்கும் இந்த ஐயம் ஏற்பட்டு, இதுகுறித்து ஸ்ரீஅன்னையாரிடம் வினவினர். சீடரின் கேள்விகளும் அன்னையின் பதில்களும் கீழே தரப்பட்டுள்ளன :—

**சீடர்:** தாயே! நாடுகிறவர்களுக்கு இறையருள் கிட்டாமற் போவதுண்டு என்றும், நாடாத சிலருக்கு இறையருள் எளிதில் கிட்டுவது உண்டு என்றும் கூறுகிறீர்களே? இதன் கருத்து என்ன? தத்துவம் என்ன?

**அன்னையார்:** கடவுளின் சுபாவம் குழந்தையின் சுபாவத்தைப் போன்றது. கெஞ்சிக் கேட்கும் சிலருக்குப் பகவானது அருள் கிட்டுவதில்லை. கேட்காதவர்களை நாடியே சென்று சில சமயங்களில் அருள்செய்கிருர். விரும்பாமல் இருந்தும் யாருக்கு இறையருள் வலிய வந்து கிடைக்கிறதோ, அவர்கள் முற்பிறவிகளில் புண்ணியமான காரியங்களைச் செய்திருப்பார்கள் போலும். அதனுல்தான் அவர்களுக்கு இறைவனுடைய கிருபை எளிதில் கிட்டுகிறது.

**சீடர்:** அப்படியானுல் பாரபட்சம் காட்டியே கடவுள் கிருபை செய்கிருர் என்று நாம் கொள்ள வேண்டியிருக்குமே?

**அன்னையார்:** ஆம், உண்மையே. எல்லாம் ஒருவனுடைய பூர்வ கருமத்தைப் பொறுத்தே உள்ளன. அவனவனது கருமபலன் முடிந்ததும், கடவுள் அவனவனுக்கே கிருபை செய்கிருர். அதனுல் அதுவே அவனுடைய கடைசிப் பிறவியாகி விடுகிறது.

※ ※ ※ ※

ஆன்மிகத்தில் முன்னேற்றம் காண விரும்பும் ஒருவன் எப்பொழுதும் மனதைத் தூய்மையாக வைத்துக்கொள்ள முயல வேண்டும். 'மனம் பரிசுத்தம் ஆகவில்லையே, ஆகவில்லையே!' என்று சந்தேகமுற்று ஏங்கிச் சதா புலம்புவது கூடாது. மனம் சுத்தமாகிவிட்டது என்ற எண்ணத்தை முழு அளவில் ஒருவன் பெருத வரையில் அவன் முன்னேற்றம் காணமுடியாது. இதை அடியில் வருமாறு ஸ்ரீ அன்னையார் கூறியுள்ளார் : -

"பரிசுத்தமற்ற மனம் எளிதில் பரிசுத்தமடைவதில்லை. மனம் பரிசுத்தம் அடையவில்லை என்ற எண்ணம் நீடிக்க நீடிக்க, அசுத்த நிலை மனதை விட்டு நீங்காமல் உரம் பெற்றுவிடுகிறது."

※ ※ ※ ※

ஞானமடைந்தோர் இறப்பையும் பிறப்பையும் கண்டு அஞ்சமாட்டார்கள். இந்த இரண்டு நிலைகளையும் அவர்கள் சமமாகவே நோக்குவர். இரண்டு நிலைகளையும் ஒன்றுபோலவே கருதி உவப்போடு ஏற்றுக்கொள்வர். இது குறித்து ஸ்ரீ அன்னையார் கூறுவது வருமாறு :—

"'லட்சக்கணக்கான பிறவிகள் எனக்கு ஏற்படட்டும். எனக்கு என்ன பயம்?' என்று நரேன் (சுவாமி விவேகானந்தர்) கூறுவது உண்டு. ஞானமுள்ளவன் மறுபிறப்புக்கு அஞ்சுவானு என்ன? ஞானம் பெற்றவன் பாவத்தைச் செய்யமாட்டான். அதனுல் அவன் அச்சமடைவதில்லை. ஞானமில்லாதவன் பந்தத்தில் சிக்கிக் கொண்டுவிடுகிருன். அதனுல் அவன் அஞ்சி அஞ்சி வாழ நேருகிறது."

※ ※ ※ ※

---

# வள்ளலார் நெறி

நா. மகாலிங்கம், பி. எஸ்ஸி., எப். ஐ.இ.



இவ்வுலகில் என்றும் அழியாமல் வாழ்வதே பெருவாழ்வு இதைச் சிரஞ்சீவி என்றும் கூறுவார்கள்.

பெரியவர்கள் இளைஞர்களை வாழ்த்துக் கூறும்போது, "என்றும் சிரஞ்சீவியாக இனிது வாழ்க." என்று கூறுவார்கள்.

சித்தர்கள் என்பவர்கள் தங்கள் உடலை அப்படியே வைத்துக்கொண்டு உயிர் வாழ்கின்றனர் என்று மக்கள் நம்புகின்றனர். உடலை அழியாமல் பாதுகாத்துக்கொள்ளும் வித்தையில் சித்துப் பெற்றவர் சித்தர்கள். இத்தகைய சித்தர்கள் இன்றும் காடுகளிலும் மலைகளிலும் வாழ்கிருர்கள் என்று மக்கள் நம்புகிருர்கள்.

"அனுமன், விபீஷணன் போன்றவர்கள் சிரஞ்சீவிகள். அவர்கள் இறக்கவில்லை. இன்னும் உயிர் வாழ்கின்றனர்" என்று நம் நாட்டு இலக்கியங்கள் கூறுகின்றன.

"மக்கள் சாகாமல் வாழ முடியுமா?" என்ருல் 'வாழ முடியும்" என்கிருர் வள்ளலார். சித்தர்கள் என்பதற்குப் பொருள் அறிவுடையவர்கள் என்பது தான். 'சித்' என்பது அறிவு விளக்கம். இதிலிருந்துதான் நிறைவு தரும் சிந்தை தோன்றியது. சிந்தையிலிருந்துதான் சிந்தனை அல்லது ஆராய்ச்சி பிறக்கும். ஆராய்ச்சியின் மூலம்தான் உண்மைகள் வெளிப்படும். ஆகவே சிந்தனைச் சக்தி படைத்தவர்கள் சித்தர்கள். சிந்தனைச் சக்தியின் மூலம் சிறந்த ஆராய்ச்சி வல்லமை பெற்றிருப்பார்கள் சித்தர்கள். ஆராய்ச்சி வல்லமையின் மூலம் உண்மைகளைக் கண்டறிந்து மக்களுக்கு வழங்கியவர்கள் சித்தர்கள். இப்படிப்பட்ட பேருண்மையைக் கண்டு மக்களுக்கு வழங்கிய பெரும் சித்தர் வள்ளலார்.

ஒவ்வொரு மனிதனின் தலையில் உச்சிப் பகுதியில் அருட்பெருஞ்சோதி இருக்கிறது அந்தச் சோதியின் ஆற்றலை மனிதன் உணர்ந்து அறிந்து உபயோகிக்காமல் இருக்கிருன். அந்தச் சோதி நமது உச்சந்தலையில் உள்ள சிற்றம்பலக் கல்லறையில் உறங்கிக் கொண்டிருக்கிறது. அதாவது செத்தது போலக் கிடக்கிறது அதை எழுப்ப வேண்டும். இந்த

ஆன்மசோதியை எழுப்புவதுதான் திருப்பள்ளி யெழுச்சி. இந்தச் சோதியை எழுப்புவதைத்தான் 'செத்தாரை எழுப்புவது' என்கிறார் வள்ளலார்.

தூங்கிய மாந்தரை எழுப்புக! நலமே ஆழ்ந்த
சன்மார்க்கத்தில் செலுத்துக!

என்றெல்லாம் பாடுகிறார்.

தம் தலையின் உச்சிப் பகுதியில் உறங்கிக்கொண்டிருக்கும் சோதியையுடைய மனிதரை எழுப்புங்கள். எல்லா நன்மைகளும் நிறைந்த உண்மை வழியான சன்மார்க்கத்தில் அவர்களைச் செல்லும்படிச் செய்யுங்கள்.

செத்தார் எழுந்தனர் சுத்த சன்மார்க்கம் சிறந்தது.

தலைப்பகுதியில் செத்தது போல் கிடக்கும் சோதியை எழுப்புவதன் மூலம் உண்மையாகவே மக்கள் விழிப்படைகிறார்கள். அவர்களின் முயற்சியால் குற்றமற்ற உண்மைநெறியான சுத்த சன்மார்க்கநெறி பரவுகிறது.

ஆன்மநேய ஒளியை எழுப்பி அதன் துணையுடன் செயற்படுபவர்கள் சாகா வரம் பெற்றவர்கள். வள்ளலார் இத்தகைய சாகா வரம் பெற்றவர். அவர் பெற்ற சாகா வரம்தான் முத்தேக சித்தி. சுத்த தேகம், பிரணவ தேகம், ஞானதேகம் ஆகிய மூன்று தேகங்களையும் பெற்ற மரணமிலாப் பெருவாழ்வில் அவர் இருக்கிறார்.

உள்ளம் களித்திடச் சாகாவரம் என்றும்
தடைப்படாச் சத்திகள் எல்லாம் அளித்தனை.

"எனது மனம் மகிழ்ச்சி அடையும்படி நான் அழியாதிருக்கும்படியான வரத்தைக் கொடுத்தாய். என்றும் அழியாத காரியங்களைச் செய்யும்படியான ஆற்றலையும் அளித்தாய்" என்கிறார் வள்ளலார்.

சன்மார்க்கம் எனக்களித்து என்னையும் மேலேற்றி
இறவாத பெருவரம் ஈந்த மெய்ப்பொருளே!

"நான் எண்ணிய சன்மார்க்கத்தில் செல்லும்படியான சக்தியை எனக்கு அளித்தாய். என்னையும் உயர்ந்தவனாக்கினாய். நான் இறவாமல் வாழும்படியான வரத்தையும் எனக்கு அளித்தாய்" என்கிறார்.

கருணைநெறி உற்றேன் எக்காலமும் சாகாமல்
ஓங்கும் ஒளிவடிவம் பெற்றேன்.

"எல்லா மக்களையும் ஒன்றெனக் கருதி, அவர்களை எல்லாம் ஒரே சமுதாயமாகச் செய்யும் ஜீவகாருண்ய மார்க்கத்தை அடைந்தேன். இதனால் எக்காலமும் சாகாமல் மேலும் மேலும் ஓங்கும் ஒளிமயத்துடன் கூடிய உடலைப் பெற்றேன்" என்கிறார்.

சித்தாடுகின்றனன், சாகாவரமும் சிறக்கப்பெற்றேன்
இத்தாரணியில் எனக்கு இணை யார் என்று இயம்புவனே!

"என் சிந்தையில் தெளிவான உண்மையை உணர்ந்து அதைப் பின்பற்றி நடக்கிறேன். இதனால் இறவாத வரத்தையும் பெற்றுக்கொண்டேன். இந்த உலகில் எனக்கு இணையானவர்கள் யார்?" என்று கேட்கிறார்.

வள்ளலார் தாம் பெற்ற சாகா வரத்தைப்பற்றி அவரே கூறியவை இவை. ஆகவே சன்மார்க்கத்தைக் கடைப்பிடிப்பவர்கள் சாகா வரம் பெறுவார்கள் என்று தம் அனுபவத்திலிருந்து வள்ளலார் அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறார்.

மடம் பெற்ற மனிதர்கள் மதிபெற்று வாழ்கின்றார்
திடம் பெற்றே எழுகின்றார் செத்தார் தினம் தினம்.

"மூடத்தனத்தினால் இதுவரை உண்மைநெறி அறியாமல் கிடந்தனர் மக்கள். இப்போது உண்மை தெரிந்து வாழ்கின்றனர். உண்மையை அறியாமல் செத்துக் கிடந்த மக்கள் எல்லாம் உண்மையை உணர்ந்து தினந்தோறும் ஒளியைப் பெற்றுப் புதிய ஆற்றலுடன் எழுந்துகொண்டிருக்கிறார்கள்" என்கிறார்.

புல்லொழுக்கம் எல்லாம் புணரியிடைப் போய் ஒழிக!
நல்லொழுக்கம் ஒன்றே நலம பெறுக! —இல்லொழுக்கில்
செத்தார்கள் எல்லாம் திரும்ப எழுந்து மனம்
ஒத்தாராய் வாழ்க உவந்து.

"கெட்ட நடத்தைகள் எல்லாம் கடலிலே விழுந்து ஒழியட்டும். மக்கள் எல்லாரும் இன்பத்துடன் வாழும் நல்ல ஒழுக்கங்கள் ஓங்கட்டும். இந்த வாழ்க்கையில் உண்மையை உணராமல் செத்துக்கிடந்தவர்கள் எல்லாரும் மீண்டும் எழுந்திருக்கட்டும். எல்லா மக்களும் ஒன்றுபட்டு ஒருமனம் உடையவர்களாய் மகிழ்ந்து வாழட்டும்" என்கிறார் வள்ளலார்.

"ஜீவகாருண்ய ஒழுக்கத்துடன் சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்து வந்தால் நம் உள்ளே உறங்கிக் கிடந்த ஒளி எழுந்து நம்மைச் சாகாமல் வாழ நெறிப்படுத்தும்" என்கிறார் வள்ளலார். *

# ஆறுவது சினம்

சரஸ்வதி



ஒரு சமயம் ஸ்ரீ பலதேவர், வாசுதேவர், ஸாத்யகி ஆகிய மூவருமாக நகரத்திலிருந்து ஏதோ ஒரு வேலையாக வெளியே புறப்பட்டனர். அவர்களுடன் சிறந்த பல சேவகர்களும் படைவீரர்களும் புறப் பட்டனர்.

முதலில் கூறப்பட்ட மூவரது குதிரைகளும் மிகவும் வேகமாகச் செல்லக் கூடியவை. அதனுல் சிறிது நேரத்தில் மூவரும் மட்டும் காட்டில் அகப்பட்டுக்கொண்டனர். உடன் வந்தவர்கள் எங்கு இருக்கிருர்கள் என்பதே தெரியாத அளவுக்குப் பின்தங்கிவிட்டனர்.

சூரியன் மலைவாயில் விழ இருள் சூழத் தொடங்கியது. அவர்களால் காட்டைத் தாண்டிச் செல்லவும் வழி புலப்படவில்லை. திரும்பிச் சென்று தங்களுடைய ஆட்களுடன் சேர்ந்து கொள்ளவோ, காட்டைத் தாண்டி வேளியே செல்லவோ முடியாத நிலை ஏற்பட்டது.

மூவரும் அடர்ந்த மரங்கள் சூழ்ந்த இடத்திற்கு வந்து சேர்ந்தனர். இருட்டில் அதற்கு மேல் செல்வது நல்லதல்ல என்ற முடிவுக்கு வந்தவுடன், எஞ்சிய இரவுப்பொழுதை அந்த இடத்திலேயே கழிப்பது என்று தீர்மானித்தனர். குதிரைகளின் மீது பூட்டியிருந்த சேணத்தை அவிழ்த்துவிட்டுக் குதிரைகளை மரத்தில் கட்டினர்.

மூவரும் இவ்விதம் முடிவு செய்த நேரத்திற்குள் இரவின் முதல் யாமத்தில் பாதி கழிந்துவிட்டது. விடியற்காலையில் இரவின் கடைசி அரை யாமத்தில் எழுந்து எப்படியும் புறப்பட்டாக வேண்டும். எனவே இடையே இருந்த மூன்று யாமங்களைக் கழிப்பதுதான் அவர்களது பிரச்னை. மூவரும் முறையே ஒவ்வொரு யாமம் விழித்திருப்பது எனவும், மற்ற இருவரும் அந்தச் சமயத்தில் உறங்குவது எனவும் தீர்மானித்தனர்.

அவர்கள் தீர்மானித்தபடி முதலில் பாரா செய்யும் வேலை ஸாத்யகிக்குக் கிட்டியது. வாசுதேவரும் பலதேவரும் கண்ணயர்ந்தனர். அதே நேரத்தில் அந்த இடத்தில் பயங்கரமான ஒரு பிசாசு தோன்றியது. அந்தப் பிசாசு அதட்டலுடன் ஸாத்யகியிடம், "அடே! இவர்கள் இருவரையும் நான் தின்னுவதற்கு எனக்கு நீ அனுமதி அளித்தால் உன்னை நான் ஒன்றும் செய்யாமல் விட்டு விடுவேன்" என்றது.

ஸாத்யகி துளியும் பயப்படவில்லை. ஆனுல் அவர் பிசாசைவிடவும் அதட்டலான குரலில், "ஏ அற்பமே! உனக்கு உயிரின் மீது பற்று இருந்தால் இப்போதே இங்கிருந்து ஓடிப்போய்விடு. ஏதாவது வாய் திறந்தாயோ அப்படியே நொறுக்கிவிடுவேன்! ஜாக்கிரதை!" என்ருர்.

ஸாத்யகி இப்படிச் சொன்னவுடன் பிசாசிற்கு அடங்காத கோபம் வந்தது. அதன் கண்கள் சிவந்து போயின. "நீ நான் சொல்வதைக் கேட்க மாட்டாய்! இங்கே வாடா!" என்று அது அதட்டிக் கொண்டே அவர்மீது பாய்ந்தது.

ஸாத்யகியும் சளைக்காமல் அதிகக் கோபத்தைக் காட்டினுர். ஸாத்யகியின் கோபம் அதிகம் ஆக ஆகப் பிசாசின் உருவமும் பலமும் அதிகரித்துக் கொண்டே வந்தன. பல தடவை அது ஸாத்யகி யைக் கீழே தள்ளி உருட்டியது. ஸாத்யகியின் உடலில் காயம் ஏற்பட்டுத் தோல் கிழிந்து இரத்தம் வழிந்தது. முழங்காலும் முகமும் வீங்கிவிட்டன.

ஸாத்யகியும் பிசாசும் சண்டை போட்டதில் ஒரு யாமம் கழிந்துவிட்டிருந்தது. உடனே பிசாசு அங்கிருந்து மாயமாய் மறைந்துவிட்டது. ஸாத்யகி பலதேவரை எழுப்பிவிட்டுத் தாம் தூங்கப் போய் விட்டார்.

ஸாத்யகி உறங்கியவுடனே மறுபடியும் அதே பிசாசு பலதேவரிடமும் சண்டைக்கு வந்தது. அது ஸாத்யகியிடம் பேசியது போலவே பலதேவ ரிடமும் பேசியது. எனவே பலதேவரும் அதனுடன் கோபமாகச் சண்டைக்குச் சென்ருர். முன்பு போலவே அந்தப் பிசாசின் உருவமும் பலமும்

பெரிதாயின. பலதேவரையும் அது நன்றாகத் துன்புறுத்திவிட்டது. இருவரும் மல்யுத்தம் செய்ததில் அடுத்த யாமம் கழிந்துவிட்டது. மறுபடியும் அது மறையவே, பலதேவர் வாசுதேவரை எழுப்பிவிட்டுத் தாம் படுத்துக்கொண்டார்.

பலதேவர் தூங்கியவுடனே பிசாசு மீண்டும் வந்துவிட்டது. வந்தவுடன் அது வாசுதேவரிடம், "நீ இவர்கள் இருவரையும் விட்டு ஓடிப்போ" என்றது. ஆனால் வாசுதேவரோ சாந்தமாக, "வாடா! வா! நல்லவேளை நீ வந்தாய். உன்னோடு மல்யுத்தம் புரிந்தால் மீதி ஒரு ஜாமம் நன்றாகக் கழியும்; தூக்கமும் வராது, சோம்பலாகவும் இருக்காது' என்றார்.

இந்தத் தடவையும் பிசாசு வாசுதேவரின் மீது பாய்ந்தது. ஆனால் இந்தத் தடவை அதற்கு அழிவு தான் காத்திருந்தது. அதனால் அது கோபத்தோடு சண்டை போடப்போட வாசுதேவர் சிரித்துக் கொண்டே, "ஆகா! நீ எவ்வளவு பெரிய வீரன்! உன்னிடம்தான் எவ்வளவு ஆர்வம் இருக்கிறது!" என்று சொல்லச் சொல்லப் பிசாசின் உருவம் குறுகத் தொடங்கியது. அதன் பலமும் குறையத் தொடங்கியது. இவ்விதம் குறைந்துகொண்டே வந்து, கடைசியாக ஒரு சிறிய புழுவின் அளவிற்கு அந்தப் பிசாசு குறைந்துவிட்டது. உடனே வாசுதேவர் அதைப் போர்வையின் ஓரத்தில் முடிந்து வைத்துவிட்டார்.

விடியற்காலையில் மூவரும் எழுந்திருந்தனர். ஸாத்யகியின் வீங்கிய முகத்தையும் முழங்காலையும் பார்த்த வாசுதேவர் வியப்புடன், "உங்களுக்கு என்ன நேர்ந்தது?" என்று விசாரித்தார்.

ஸாத்யகியும் பிசாசுடன் தாம் முதல் நாள் இரவில் போரிட்ட கோரத்தை எண்ணிப் பார்த்துக் கொண்டே நடந்ததை விளக்கிக் கூறினார். அதைக் கேட்ட பலதேவரும் பிசாசிடம் தாம் பட்ட அவஸ்தைகளைக் கூறினார்.

ஸாத்யகியும் பலதேவரும் கூறியவற்றைக் கேட்ட வாசுதேவர் சிரித்துக்கொண்டே, போர்வையில் இருந்த முடிச்சை அவிழ்த்து, அதில் கட்டி வைத்திருந்த பிசாசை எடுத்து வெளியில் போட்டார். அந்த அற்ப உருவத்தைக் காட்டி, வாசுதேவர் அவர்களிடம், "இதோ இதுதான் அந்தப் பிசாசு. நீங்கள் எந்த அளவிற்குக் கோபம் காட்டுகிறீர்களோ அந்த அளவிற்கு அதன் பலமும் உருவமும் வளர்ந்துவிடும். உங்கள் இருவருக்கும் இது யார் என்று தெரியவில்லை, இது தான் கோபம் எனப்படுவது. கோபத்தின் சுபாவமே இதுதான். கோபப்படாமல் இருந்தால் இதன் பலமும் குறையும், அது இருக்கும் இடமும் தெரியாமல் போய்விடும். ஆகவே நாம் கோபத்தை அடக்கினால் எதிராளியின் கோபமும் மறைந்து விடும்" என்றார்.

மற்ற இருவரும் தம் அறியாமையை எண்ணி, கோபத்தால் இரவில் வாங்கிக்கொண்ட அடியின் வலியையும் மறந்து வருந்தினர். ☆



# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

பிரம்மசாரி: இயேசு கிறிஸ்துவுங்கூட, "நானும் என் பிதாவும் பரம்பொருள்) ஒன்றே" என்று கூறியுள்ளார்.

சுவாமி துரியானந்தர்: விசாரணை மன்றத்தில் அவர் மிகவும் ஜாக்கிரதையுடன் பதில்கள் அளித்தார். "யூதர்களுக்கு நீங்கள் அரசரா?" என்று கேட்டவுடன், "அப்படி நீங்கள் (தான் இப்போது) சொல்கிறீர்கள்" என்று மறுமொழி கூறினர். அவரது சக்தியைக் கண்டும், அவரது செல்வாக்கு இவர்களது வருவாயைப் பாதிக்குமளவுக்கு மக்கள் அவரிடமே மிக்க நம்பிக்கையுடன் அடங்கியிருந்ததனுலும் புரோகிதர்களுக்கு அவரிடம் ஆத்திரம் மூண்டிருந்தது. "என் பின் வருவீராக! மக்களை வலையில் பிடிக்கும் மீனவர்களாக உங்களை ஆக்குகிறேன்" என்ருர் இயேசு. உடனேயே, (மீன் பிடித்துக்கொண்டிருந்த) ஸைமனும், ஸைமனுடைய சகோதரரும் வலையைப் போட்டுவிட்டு அவரைத் தொடர்ந்தனர். அவரது சீடர் ஒருவர் அவரிடம், "ஐயனே! முதலில் நான் சென்று என் தந்தையைச் சவ அடக்கம் செய்து வர அனுமதிப்பீர்" எனக் கோரினர். ஆனல் இயேசு சொன்னர், "என் பின் வா. செத்தவர்கள் தங்களது செத்துப்போன சுற்றத்தினரைப் புதைக்கட்டும்" என்று. புரோகிதர்கள் அவரால் தங்களுக்கு நாசம் எனக் கண்டவுடன் அவரை நீதி மன்றத்தில் குற்றம் சாட்டினர். ஆனல் ராஜப்பிரதிநிதியால் அவரிடம் குற்றம் ஏதும் காண முடியவில்லை. அவரை விடுதலை செய்யத் தயாராகவே இருந்தார். ஆனல் கூட்டத்தினர் இயேசுவுக்கு மரண தண்டனை விதிக்க வேண்டுமென வற்புறுத்தினர். எனவே ராஜப்பிரதிநிதி இயேசுவை அவர்களிடம் ஒப்புவித்துவிட்டார்—சிலுவையில் அறையப்படுவதற்காக. "இந்த நியாயமான நபரின் இரத்தத்தில் பங்கு பெருத நிரபராதி நான். இதை உணர்வீர்" என்று கூறியபடியே ராஜப்பிரதிநிதி இவ்விதம் செய்தார்.

சீடர்: இயேசுவின் நெருங்கியச் சீடர்கள் பரமண்டல பிதா உண்மையிலேயே இறங்கி வந்து (இயேசு சொன்னபடி) தமது ராஜ்யத்தைப் புவியில் நிறுவுவார் என எண்ணினர்.

சுவாமி: (அவர்கள் இப்படி எண்ணியபோது) இயேசு, "ஏன்? ஆண்டவனது சாம்ராஜ்யம் உங்களுக்குள்ளேயே (ஒவ்வொரு ஜீவனுக்கும் உள்ளேயே) இருக்கிறதே!" என்ருர்.

சீடர்: கிறிஸ்துவத் துறவிகளுள் அஸிஸியைச் சேர்ந்த புனிதர் ஃப்ரான்ஸிஸின் வாழ்க்கை எத்தனை அற்புதமாக உள்ளது!

சுவாமி: ஆம். அவர் இயேசுவைத் தியானித்ததில் இருந்த தீவிரம் காரணமாக அவரது கைகளிலும் கால்களிலுமே சிலுவைக் காயங்கள் ஏற்பட்டன. மரிக்கும் வரையில் அவர் இந்த அடையாளங்களைத் தாங்கி வந்தார்.

சீடர்: இஸ்லாமியரிலும் பல மகான்கள் தோன்றியுள்ளனர்.

சுவாமி: ஆம், நிச்சயமாக! ஒவ்வொரு மதத்தினரிலும் இப்படிப்பட்ட மகாத்மாக்கள் பிறந்து சத்தியத்தை ஸாக்ஷாத்கரித்திருப்பதனுல்தான் பல சகாப்தங்களைக் கடந்து அந்த மதங்கள் உயிர் வாழ்கின்றன.

சுவாமிஜி (விவேகானந்தர்), "வழி காட்டுங்கள், வழி காட்டுங்கள் என்று எல்லோரும் வந்து கேட்கிருர்களே தவிர, எவரும் எந்த வழியையும் (நடைமுறையில்) பின்பற்ற மாட்டார்கள்" என்று கூறுவது வழக்கம்.

பகவானை மனப்பூர்வமாக அழைத்தாலும் அவனைக் காண முடிவதில்லை என்று சொல்வது சரியல்ல. ஒரு பையன் இறைவனை, 'அண்ணு

மதுசூதனு' என்று கூப்பிடுவானும். அந்தப் பையன் பெயர் என்ன?

**சீடர் :** ஜடிலன்.

**சுவாமி :** ஆமாம், ஆமாம், ஜடிலன்தான்! காட்டு வழியே தன்னந்தனியாகப் பள்ளி செல்வதற்கு அவன் அஞ்சினனும். அவனுடைய தாயார், "உனக்கு மதுசூதனன் என்று ஓர் அண்ணன் இருக்கிறன். அவனைக் கூப்பிட்டுக்கொள். பிறகு உனக்குப் பயமே இராது" என்றாள். மதுசூதனன் என்று தனக்கு உண்மையிலேயே ஒரு சகோதரன் இருப்பதாக அந்தப் பிள்ளை திடமாக நம்பினன். காட்டில் அவனுக்கு அச்சம் ஏற்படும்போதெல்லாம் அண்ணன் மதுசூதனனைக் கூப்பிடுவான். உடனே அண்ணனும் வந்து அவனுக்குத் துணையாக முன்னே செல்வான். ஆசிரியருக்கு இது தெரிய வந்ததும் அவர் ஜடிலனிடம், "உன் அண்ணனை எனக்குக் காட்ட முடியுமா?" என்று கேட்டார். "ஏன் முடியாதாம்?" என்று ஜடிலன் பதில் சொன்னன். இருவரும் காட்டுக்குச் சென்றனர். பையன் கூப்பிட்டான். உடனே மதுசூதனன் வந்துவிட்டான். ஆனால் ஆசிரியரின் கண்ணுக்கு அவன் புலனாகவில்லை. அவனது காற்சிலம்பின் ஒலி மட்டுமே அவருக்குக் கேட்டது. இந்த ஒலியுங்கூட ஜடிலனுடைய தாய்க்குக் கேட்கக் கொடுத்து வைத்திருக்கவில்லை. அவள் ஏதோ பிள்ளை பயப்படுகிறனே என்பதற்காக இப்படிச் செய்யச் சொன்னளே தவிர, அவளுக்கு அதில் நம்பிக்கை இல்லையே!

சம்சார சாகரத்தைக் கடந்த ஆய்ச்சியின் கதை உனக்குத் தெரியுமோ? பிராம்மணப் பண்டிதர் ஒருவரது வீட்டுக்கு அந்த இடைச்சி பால் கொடுத்து வந்தாள். வழியில் அவள் ஓர் ஆற்றைக் கடக்க வேண்டியிருந்தது. தினமும் சரியான சமயத்துக்குப் படகு கிடைப்பது சிரமமாக இருந்தது. எனவே அந்த நாட்களில் அவள் நேரம் தாழ்த்தியே பால் கொடுக்க வந்தாள். இதனல் பண்டிதரின் குழந்தைகள் மிகவும் கஷ்டப்பட்டன. ஒரு நாள் அவர் அவளைக் கடுமையாகக் கடிந்து கொண்டார். "சாமி, நான் என்ன செய்வது? தினமும் சரியான நேரத்தில் படகு கிடைக்க மாட்டேன் என்கிறது. அதனல்தான் தாமதமாகிறது' என்றாள். உடனே, மெத்தக் கற்ற அந்தப் பண்டிதர், "ஓகோ! உன்னல் இந்தச் சிறிய ஆற்றைக் கடக்க முடியவில்லையா? இவ்வாறயின் எப்படிச் சம்சார சாகரத்தைக் கடப்பாய்?" என்றார். எழுத்தறிவில்லாத இடைச்சி அதுவரை 'சம்சார சாகரம்' என்ற சொற்றெடரையே கேட்டதில்லை. எனவே வாயடைத்து நின்றாள். பிறகு பண்டிதர் விளக்கம் தந்தார். "பகவானின் நாமத்தை உச்சரிப்பதனல் எவரும் எளிதே சம்சார சாகரத்தைக் கடந்து விடலாம்' என்றார். "அவ்வாறு இருக்க, இந்தச் சிற்றாறு எம்மட்டு?" என்றார். ஆய்ச்சி மிகவும் மகிழ்ச்சியடைந்து புறப்பட்டாள்.

அன்றிலிருந்து அவள் சற்றும் நேரம் தப்பாமலே பால் கொடுக்க வரலானாள். ஒரு நாள்கூடத் தாமதமாக வரவில்லை. ஒரு தினம் பண்டிதர் அவளிடம், "இப்போதெல்லாம் நீ தினமும் வேளை தப்பாமலே வருகிறயே! எப்படி நதியைத் தாண்டி வருகிறய்?" என்றார்.

"ஏன் சாமி, நீங்கள்தானே தயைசெய்து எனக்கு வழிசொல்லிக் கொடுத்தீர்கள்? அதனல் இப்போதெல்லாம் நான் படகுக்குக் காத்திருப்பதில்லை. படகுக்காரனுக்கு நான் பணம் கொடுக்க வேண்டியும் இருக்கவில்லை" என்றாள் அவள்.

"என்னது? என்ன சொன்னய்? பின், யார் உன்னை ஆறு தாண்டி அழைத்து வருவது?" என்றார் பண்டிதர்.

"எனக்கு எவரும் உதவி செய்ய வேண்டியதில்லை, சாமி! நான் நேரே ஆற்றுவிளிம்புக்கு வருகிறேன்; ஹரிநாமத்தைச் சொல்கிறேன்; ஆற்றின் மீதே நடந்து வந்துவிடுகிறேன்" என்றாள் இடைச்சி.

"நீ எவ்வாறு இதைச் செய்கிறய் என்று எனக்குக் காட்டுவாயா?" என்றார் பண்டிதர். "ஏன் காட்டாமல்? வாருங்கள் சாமி" என்றாள். இடைச்சி பண்டிதரால் நம்ப முடியவில்லை. என்ன நடக்குமோ என்ற எதிர்பார்ப்புடன் இடைச்சியைத் தொடர்ந்தார். ஆய்ச்சி ஆற்றுமுனைக்குச் சென்றாள்; ஹரிநாமத்தை உச்சரித்தாள்; ஆற்றின் வழியே நடக்கலானாள் — முழங்காலளவுக்கு மேல் நீரோட்டம் இல்லாதது போல. அவள் அக்கரை சென்று சேர்ந்ததும் திரும்பிப் பார்த்தாள். எதிர்க் கரையில் பண்டிதர் ஆச்சரியத்தில் அதிர்ச்சியுற்றவராக நிற்கக் கண்டாள். "ஏன் சாமி, அங்கேயே நின்றுகொண்டிருக்கிறீர்கள்? ஹரியின் பெயரை உச்சரித்துக்கொண்டே ஆற்றின் வழியாக வாருங்கள்" என்றாள்.

பண்டிதர் திக்பிரமை உற்றார். பரவசத்தில் கட்டுண்டு ஹரிநாமத்தை கூறிய வண்ணம் ஆற்றுக்குள்



# கல்வியும் சமுதாயமும்

சுவாமி விவேகானந்தர்

1

மனிதனுக்குள் ஏற்கனவே புதைந்திருக்கும் பரிபூரணத் தன்மையை வெளிப்படுத்துவதுதான் கல்வியாகும்.

2

கல்வி என்ருல் என்ன? அது புத்தகங்களைப் படிப்பதா? இல்லை. அல்லது அது பலவிதமான வைகளைக் குறித்த அறிவா? அதுவும் இல்லை. எத்தகைய பயிற்சியின் மூலம் மனவுறுதியின் வேகமும் அதன் வெளிப்படும் தன்மையையும் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு, பயன்தரும் வகையில் அமைகிறதோ அந்தப் பயிற்சிதான் கல்வியாகும்.

3

வெறும் புள்ளி விவரங்களைச் சேகரித்துக் கொண்டிருப்பதல்ல, மனதை ஒருமுகப்படுத்துவது தான் என்னைப் பொறுத்தவரையில் கல்வியின் அடிப்படையான இலட்சியமாகும்.

மீண்டும் ஒருமுறை நான் கல்வி கற்பதாக இருந்தால், அந்த விஷயத்தில் சுதந்திரம் ஏதாவது எனக்கு இருக்குமாஞல், புள்ளி விவரங்களை நான் படிக்க மாட்டேன். முதலில் மனதை ஒருமுகப் படுத்தும் ஆற்றலையும், பற்றில்லாமல் இருக்கும் திறந்த உள்ளத்தையும் வளர்த்துக் கொள்வேன். அதன் பிறகு பண்படுத்தப்பட்ட அந்தக் கருவியைக் கொண்டு, நினைத்த நேரத்தில் உண்மைகளை நான் சேகரித்துக் கொள்வேன்.

4

பாமரர்களாகிய பொதுமக்களை வாழ்க்கைப் போராட்டத்திற்குத் தகுதி பெற்றவர்களாக இருக்க உதவி செய்யாத கல்வி, உறுதியான நல்ல ஒழுக்கத்தையும், பிறருக்கு உதவி புரியும் ஊக்கத்தையும், சிங்கம் போன்ற மன உறுதியையும் வெளிப்படுத்தப் பயன்படாத கல்வி அதைக் கல்வி என்று சொல்வது பொருந்துமா? எத்தகைய கல்வியைத் தன்னம்பிக்கையைத் தந்து ஒருவனைத் தனது சொந்தக் கால்களில் நிற்கும்படி செய்கிறதோ, அது தான் உண்மையான கல்வியாகும்.

5

கல்வி என்பது உன்னுடைய மூளைக்குள் பல விஷயங்களைப் போட்டுத் திணித்து வைப்பதல்ல. அப்படித் திணிக்கப்படும் அந்த விஷயங்கள் வாழ் நாள் முழுவதும் ஜீரணமாகாமல் உனக்குத் தொந்தரவு கொடுத்துக் கொண்டே இருக்கும்.

---

[முன்பக்கத் தொடர்ச்சி]

பிரவேசித்து நடக்கலாஞர். ஆஞல் ஆழம் அதிகமாக ஆக, அவர் தமது வஸ்திரத்தை இரு கைகளாலும் மேலே தூக்கிக் கொண்டார். அதாவது இதயபூர்வமாக நம்பிக்கையின்றியே வாயால் மட்டும் நாமோச்சரணம் செய்தார். இந்த அவதி நிலையில் அவரைக் கண்ட இடைச்சி, "ஓ! நீர் ஹரியின் பெயரைச் சொல்லும் அதே நேரத்தில் துணியையும் தூக்கிக் கொள்கிறீரே! இது உதவாது, சாமி!" என்ருளாம்.

சற்றே சுயசோதனை செய்து பார்த்துக்கொண்டால் எல்லாம் தெளிவாகிவிடும். சமீபத்தில் என் சரீரத்துக்குள் ஒரு விசித்திரப் போராட்டம் நடக்கக் கண்டேன். அண்மையில் நான் நோயுற்றிருந்த போது எலும்புக்கூடாக இளைத்துவிட்டேன். (முழங்காலுக்குக் கீழுள்ள ஆடுசதையைத் தொட்டு) இப்போது நீங்கள் பார்க்கும் இந்தத் தசை முழுக்கக் கரைந்திருந்தது. பிறகு இது முழுவதும் புதிதாக வளர்ந்தது. *

வாழ்க்கையை உருவாக்கக் கூடிய, மனிதனை மனிதனாக்கக் கூடிய, நல்ல ஒழுக்கத்தை வளர்க்கக் கூடிய கருத்துக்களைக் கிரகித்து அவைகளை நாம் நம்முடையவைகளாக்கிக்கொள்ள வேண்டும்.

நீ ஐந்தே ஐந்து உயர்ந்த கருத்துக்களைக் கிரகித்துக் கொண்டு, அவைகளை நீ உன்னுடைய வாழ்க்கையிலும், நடத்தையிலும் ஊடுருவி நிற்கச் செய்தால்—ஒரு பெரிய புத்தகசாலை முழுவதையும் மனப்பாடம் செய்திருப்பவனை விட நீயே அதிகம் கல்வி கற்றவன் ஆவாய்.

## 6

நியூட்டன் புவியீர்ப்பு சக்தியைக் கண்டுபிடித்தார் என்று சொல்கிறோம். அது எங்காவது ஒரு மூலையில் அவர் வருவார் என்று உட்கார்ந்து காத்துக் கொண்டிருந்ததா? அது அவர் உள்ளத்திலேயே இருந்தது. சரியான நேரம் வரவே அதை அவர் கண்டுபிடித்தார்.

காலமெல்லாம் உலகம் இதுவரையிலும் பெற்று வந்திருக்கிற அறிவு முழுவதும் மனதிலிருந்துதான் வந்திருக்கிறது. பிரபஞ்சத்திலுள்ள அறிவு முழுவதும் நிரம்பிய மிகப்பெரிய நூல் நிலையம் உன்னுடைய உள்ளத்திலேயே அடங்கி இருக்கிறது. வெளி உலகம் வெறும் தூண்டுதலாக மட்டுமே அமைகிறது. அமைந்து உன்னுடைய உள்ளத்தை நீ ஆராய்வதற்குத் தேவையான ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக்கொடுக்கிறது.

## 7

ஒவ்வொருவனும் கட்டளையிடவே விரும்புகிறான். கீழ்ப்படிவதற்கு ஒருவரும் தயாராக இல்லை. பண்டைக் காலத்தில் நிலவி வந்த வியப்பிற்குரிய பிரம்மச்சரிய முறை இந்த நாளில் மறைந்து போனதுதான் இதற்குக் காரணம்.

முதலில் கீழ்ப்படிவதற்குக்கற்றுக் கொள். பிறகு கட்டளையிடும் பதவி உனக்குத் தானாக வந்து சேரும். எப்போதும் முதலில் வேலைக்காரனாக இருக்கக் கற்றுக்கொள். அதன் பின்பு எஜமானனாகும் தகுதி உனக்கு வந்து சேரும்.

## 8

கல்வி, கல்வி, கல்வி ஒன்றே இப்போது நமக்குத் தேவை! ஐரோப்பாவின் பல நகரங்களுக்கு நான் பிரயாணம் செய்திருக்கிறேன். அங்கு சாதாரண ஏழை எளிய மக்களுக்குக் கூடக் கிடைத்திருக்கும் வாழ்க்கை வசதிகளையும் கல்வியையும் நான் கவனித்திருக்கிறேன். அப்போதெல்லாம் நமது நாட்டு ஏழை எளிய மக்களின் பரிதாப நிலையை நினைத்து நான் கண்ணீர் விட்டு அழுதிருக்கிறேன். இந்த வேறுபாட்டிற்கு என்ன காரணம்? கல்வி என்பதுதான் எனக்குக் கிடைத்த விடை.

## 9

சிரத்தைதான் நமக்குத் தேவை. துரதிஷ்டவசமாக இந்தியாவிலிருந்து இது கிட்டத்தட்ட மறைந்தே போயிருக்கிறது. இப்போது நாம் இருக்கும் நிலைமைக்கே சிரத்தையை இழந்து விட்டதுதான் காரணமாகும். மனிதனுக்கு மனிதன் வேறுபடுவதற்குக் காரணம், இந்த சிரத்தையிலுள்ள வேறுபாடே தவிர வேறொன்றுமில்லை. இந்த சிரத்தைதான் ஒரு மனிதனை பலவீனனாகவும், தாழ்ந்தவனாகவும் ஆக்கி விடுகிறது.

## 10

நமது தேசிய இரத்தத்தில் ஒரு பயங்கரமான நோய் ஊர்ந்து கொண்டிருக்கிறது. அதாவது எதை எடுத்தாலும் எள்ளி நகையாடுவது, சிரத்தை இல்லாமல் இருப்பது. இந்த நோயை ஒழித்துக் கட்டுங்கள். வலிமையுடன் சிரத்தையைப் பெற்றவர்களாக இருங்கள். மற்றவைகள் அனைத்தும் தாமாக நிச்சயம் வந்து சேரும்.

## 11

தாழ்ந்த நிலையிலுள்ள நம்முடைய மக்களுக்குக் கல்வியைத் தந்து, இழந்துவிட்ட தங்களின் உயர்ந்த நிலையை அவர்கள் வளர்த்துக் கொள்ளும்படி செய்ய வேண்டும். இதுதான் நாம் இப்போது செய்ய வேண்டிய ஒரே சேவையாகும்......உயர்ந்த கருத்துக்களை அவர்களுக்குக் கொடுங்கள். அந்த ஒரே ஒரு உதவிதான் அவர்களுக்குத் தேவைப்படுகிறது. பிறகு அதன் விளைவாக மற்ற நன்மைகள் எல்லாம் வந்து சேரும். இரசாயனப் பொருள்களை ஒன்று சேர்த்து வைப்பது தான் நமது கடமை. பின்பு அவைகள் இயற்கையின் விதியையொட்டி தாமாகவேப் படிகங்களாக மாறிவிடும் ..இப்போது மலை முகமதுவிடம் செல்லாவிட்டால், முகமதுதான் மலையிடம் செல்ல வேண்டும். ஏழைப் பையன் கல்வியை நாடி வர முடியாவிட்டால், கல்விதான் அவனை நாடிப்போக வேண்டும். ☆




# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

## 1979 ஜூன் மாத நிகழ்ச்சிகள்

சத்சங்கம் : ஞாயிறுதோறும் மாலை 4 மணிமுதல் 6-30 மணிவரை

1. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (10-6-79 & 24-6-79)
2. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (3-6-79 & 17-6-79)

மாலை 4-30 மணி முதல் 5-30 மணி வரை சொற்பொழிவு (தமிழ்)

1. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் – திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (3-6-79)
2. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் திரு வி. எஸ். வி. குருசுவாமி சாஸ்திரிகள் (10-6-79)
3. இராமாயணம்—டாக்டர் என். விழிநாதன் (24-6-79)
4. ஸ்ரீமத் பாகவதம்—திரு 'அண்ணு' சுப்பிரமணியம் (17-6-79)

மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை சொற்பொழிவு (ஆங்கிலம்)

ஸ்ரீமத் பகவத் கீதை – சுவாமி கபீரானந்தர் (3-6-79, 10-6-79, 17-6-79 & 24-6-79)

சிறப்புச் சொற்பொழிவுகள்: சனிக்கிழமைகளில் மாலை 6 மணிக்கு

1. நான் யார்?—திரு எஸ். சி. பிள்ளை (9-6-79)
2. பஜனை — 2-6-79 & 23-6-79)

விசேஷ தினங்கள் :

24-6-79 ஞாயிறு : அந்தர்யோகம் (சாதனை தினம்)

6-6-79 & 20-6-79 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்கு பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

30-6-79 ஞாயிறு: ஸ்ரீ சியாம நாம சங்கீர்த்தனம் (மாலை வழிபாட்டிற்குப் பிறகு)

மடத்தைச் சேர்ந்த சாதுக்களால் சென்னை நகரத்தில் நடத்தப்பெறும் வேறு சில நிகழ்ச்சிகள்

9-6-79 சனி மாலை 5-30 மணிக்கு ராமகிருஷ்ணரின் உபதேசங்கள் — சுவாமி கீர்த்திதானந்தர்
இடம் : 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்

9-6-79 சனி மாலை 6-30 மணிக்கு ஸ்ரீமத் பகவத்கீதை — சுவாமி ராகவேசானந்தர்
இடம் : இல. 18, 9-வது லேன், சாஸ்திரி நகர்

வார நாட்களில் மாலை 5-45 மணிக்கு நடைபெறும் நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 1. | திங்கள் | ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்—சுவாமி அமிர்தானந்தர் |
| 2. | செவ்வாய் | நாரத பக்தி சூத்திரம் — சுவாமி கபீரானந்தர் |
| 3. | புதன் | கட உபநிஷதம் — சுவாமி அமலாத்மானந்தர் |
| 4. | வியாழன் | மகாபாரதம் — திரு 'அண்ணு' சுப்பிரமணியம் |
| 5. | வெள்ளி | ஸ்ரீமத் பகவத் கீதை — சுவாமி தன்மயானந்தர் |

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,

ஸ்ரீ ராமகிருஷ்ணமடம், சென்னை-600 004

ஆசிரியர்: சுவாமி தன்மயானந்தர்; துணை ஆசிரியர்; சுவாமி கமலாத்மானந்தர்:
பதிப்பாளர்: சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.
அச்சிடுபவர்: R. கிருஷ்ணஸ்வாமி, ஸ்ரீமதி பிரிண்டர்ஸ், 3/30 மவுண்ட் ரோடு, சென்னை-600 002